ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



ஸ்ரீ யாமுநாசார்யர்

அருளிச்செய்த

# தத்வபூஷணம்



கீர்த்திமூர்த்தி ஸ்ரீ உ.வே. காரப்பங்காடு

வேங்கடாசாரியார் ஸ்வாமி நினைவு வெளியீடு

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீவைஷ்ணவ ரத்நமாலா - 16

# ஸ்ரீ யாமுநாசார்யர்

அருளிச்செய்த

# தத்வபூஷணம்


பரிசோதகர்

ஸ்ரீ உ.வே. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்

அட்வகேட்

*ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சநம்* ஆசிரியர்

3, புத்தூர் அக்ரஹாரம்,

திருச்சி-17



கீர்த்திமூர்த்தி ஸ்ரீ உ.வே. காரப்பங்காடு

வேங்கடாசாரியார் ஸ்வாமி நினைவு வெளியீடு

1999 Rs 5

ஶ்ரீ:

ஶ்ரீமதே ராமாநுஜாய நம:

# முன்னுரை

ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு உபகாரகமாகவும் போக்,யமாகவும் இருக்கும் அரிய க்,ரந்த,ங்களை வெளியிட்டுவரும் எமது முயற்சியில் இந்தத்தலைசிறந்த நூலை வெளியிடுவதில் மிக்க ஸந்தோஷமடைகிறோம். தத்வத்ரயத்தையும் ரஹஸ்யத்ரயத்தையும் மிகச்சுருக்கமாகவும் தெளிவாகவும் விளக்கும் இந்நூல் ஒரு பூர்வாசார்யக்,ரந்த,மாகும். அநேகப்ரமாணவசநங்களையும் ஐதிஹ்யங்களையும் கொண்டு தொகுக்கப்பட்ட இதன் நடை மிகவும் அற்புதமானது. இதிலுள்ள மேற்கோள்கள் ரஸமானவையாயும் தெளிவூட்டுவனவாயும் உள்ளன.

சீரிய மணிப்ரவாளநடையில் அமைந்த இந்நூல் காலக்ஷேபரீதியில் கற்கப்படவேண்டிய ஒன்றாகும். தெலுங்கு எழுத்தில் இதற்குமுன் அச்சிடப்பட்ட இது பல ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு எட்டாததாயிருந்தது. தற்போது தமிழ் எழுத்தில் படிப்பதற்கு எளிதாக அச்சிடப்படுகிறது. இதுபோன்ற இன்னும் பல அரும்பெரும் க்,ரந்த,ங்கள வெளிவரவுள்ளன. அவைகளைப்பெரியோர்கள் கடாக்ஷித்தருளவேணுமென்று ப்ரார்த்தி,க்கிறேன்.

கீர்த்திமூர்த்தியான காரப்பங்காடு ஸ்ரீ உ வே வேங்கடாசாரியார் ஸ்வாமி நினைவாக வெளியிடப்பட்டுவரும் ஸ்ரீவைஷ்ணவரத்நமாலாவின் இந்த இதழை ஷெ ஸ்வாமியின் திருநக்ஷத்ரதிநன்னாளான பங்குனி புநர்வஸு அன்று வெளியிடுவதில் மிகவும் மகிழ்ச்சியடைகிறோம். இதைக்கடாக்ஷித்து ஸ்ரீவைஷ்ணவர் களனைவரும் இன்புறுவர் என்று நம்புகிறோம். பிழையேதும் வாராதபடி நன்கு பரிஶோதித்துக்கொடுத்த புத்தூர் ஸ்ரீ உ.வே. கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் ஸ்வாமிக்கு மிகவும் கடமைப்பட்டிருக்கிறேன். இதில் ஏதேனும் பிழை காணப்பட்டால் பெரியோர்கள் க்ருபையோடு தெரிவிக்குமாறு ப்ரார்த்திக்கிறேன். பின்வரும் வெளியீடுகளில் திருந்திய பாட,ம் அச்சிடப்படும்.

த,ாஸன்
விஜயராகவன்

பஹுதாந்ய பங்குனி புநர்வஸு
26-3-99

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# அணிந்துரை

(ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் (ஸுதர்சனர்), ஆசிரியர் - ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம், 3-B, புத்தூர் அக்ரஹாரம், புத்தூர், திருச்சி - 620017.)

விசிஷ்டாத்வைத ஸ்ரீவைஷ்ணவ தர்சந ஸ்தாபகரான எம்பெருமானாருக்கு 1, பெரியநம்பி, 2. திருக்கோட்டியூர் நம்பி, 3. திருமாலையாண்டான், 4. பெரிய திருமலைநம்பி, 5. திருவரங்கப் பெருமாளரையர் என்று ஐந்து பெரியவர்கள் ஆசார்யர்களாய் இருந்தனர். இவர்கள் அனைவரும் நாதமுனி களின் திருப்பேரரான ஆளவந்தார் என்னும் யாமுநாசார்யரின் சிஷ்யர்கள். இவர்களில் திருமாலையாண்டான் எம்பெருமானாருக்குத் திருவாய்மொழியின் அர்த்தத்தை அருளிச்செய்தார். இவர் பூர்வசிக வைஷ்ணவ குலத்தில் அவதரித் தவர். இவர் தம் குமாரரான சுந்தரத்தோளுடையானை உத்தாரக ஆசார்யரான எம்பெருமானார் திருவடிகளில் ஆச்ரயிக்கும்படி செய்தார். 'பெரியாண்டான்' என்று புகழ்பெற்ற இவர் தம்முடைய குமாரருக்குத் தம்முடைய ஆசார்யரான எம்பெருமானாரின் திருநாமமான இளையாழ்வார் என்னும் திருநாமத்தைச் சூட்டினர். இவருடைய பௌத்ரர் இந்தத் தத்வபூஷணத்தை அருளிச்செய்த யாமுநாசார்யர். இவ்விஷயங்கள் இந்த யாமுநாசார்யர் அருளிச்செய்த ப்ரமேயரத்நம் என்னும் க்ரந்தத்திலிருந்து தெரியவருகிறது. அந்த க்ரந்தத்தில் வ்யாக்யாந சக்ரவர்த்தியான பெரியவாச்சான்பிள்ளை இளையாழ்வாரான திருமாலையாண்டானிடம் பஞ்ச ஸம்ஸ்காரம் செய்துகொண்டவர் என்றும் அருளிச் செய்யப்பட்டுள்ளது. பெரியவாச்சான்பிள்ளை இந்த க்ரந்த கர்த்தாவிற்குத் தம் திருத்தகப்பனாரான யாமுநாசார்யரின் திருநாமத்தைச் சாத்தியிருக்கக்கூடும். இந்த க்ரந்தகர்த்தா பெரியவாச்சான்பிள்ளையின் சிஷ்யரான வாதிகேஸரி அழகிய மணவாளச் சீயரின் சிஷ்யர் என்று பெரிய திருமுடியடைவு கூறுகிறது. இவர் ப்ரமேயரத்நம், இந்த தத்வபூஷணம் ,

ரஹஸ்யத்ரயஸாரம் என்னும் மூன்று நூல்களை அருளிச்செய்ததாக ப்ராசீந க்₃ரந்தங்களில்காண்கிறது. பழைய நூல்களில் -

"ஸ்ரீமாலாத₄ரவம்ஶ மௌக்திக மணி: கண்ட₂ரவோ வாதி₃நாம்
நாம்நா யாமுந தே₃ஶிக: கவிவர: பாதஞ்ஜலே பண்டி₃த:"

(திருமலையாண்டான் வம்ஶமாகிற கடலில் விளைந்த சிறந்த முத்துப் போன்றவரும், வாதிகளுக்குச் சிங்கம் போன்றவரும், கவிகளில் சிறந்தவரும், யோக₃ஶாஸ்த்ரத்தில் தேர்ந்தவருமாய் இருந்தவர் யாமுநாசார்யர்) என்று இவருடைய பெருமை பேசப்படுகிறது.

இவருடைய க்ரந்தங்களில் ப்ரமேயரத்நமும், தத்வபூஷணமும் தெலுங்குலிபியில் பல வருடங்களுக்கு முன் அச்சிடப்பட்டுள்ளன. ரஹஸ்யத்ரயஸாரம் என்னும் க்ரந்தம் இப்போது கிடைப்பதில்லை. இப்போது கிடைக்கும் இவருடைய இரு நூல்களிலும் இவர் பல ஸூக்திவாக்யங்களை எடுத்துக் காட்டியிருக்கிறார். அவற்றிலிருந்து நம்முடைய பூர்வாசார்யர்களைப்பற்றிய பல செய்திகள் தெரியவருகின்றன.

ஸ்ரீ.உ.வே.ஆத்தான் விஜயராகவன் ஸ்வாமி இந்தத் தத்வபூஷணத்தை முதல் முறையாகத் தமிழில் வெளியிட்டிருப்பது ஸ்ரீவைஷ்ணவஸமூகத்திற்குச் செய்திருக்கும் மிகப்பெரிய உபகாரமாகும். இதுபோலவே யாமுநாசார்யருடைய மற்றொரு நூலான ப்ரமேய ரத்நத்தையும் தமிழ் லிபியில் விரைவில் அச்சிட்டு வெளியிடுவார் என்று நம்புகிறோம். இத்தகைய இவருடைய முயற்சிகள் வெற்றி பெற எம்பெருமான் அருள்வானாக. ஸ்ரீவைஷ்ணவர்கள் அனைவரும் இந்நூலை வாங்கிப்படித்துப் பயனடைவார்களாக.

திருச்சி-17.
பஹுதாந்ய தையில் மகம்
2-2-1999.

ஸ்ரீவைஷ்ணவதாஸன்,
ஸ்ரீ க்ருஷ்ணஸ்வாமி அய்யங்கார்.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீயாமுநாசார்யர் அருளிச்செய்த

# தத்வபூஷணம்

**ஆக்₂யயா யாமுநாசார்ய: ஸௌம்யராஜ புரோஹித: ।**
**அரீரசதி₂த₃ம் பும்ஸாம் பூ₄ஷணம் தத்வபூ₄ஷணம் ॥**

*நெஞ்சினால் நினைந்தும் வாயினால் மொழிந்தும் நீதியல்லாதன செய்தும்* என்று சொல்லுகிறபடியே த்ரிவித கரணங்களாலும் பாபார்ஜநம் பண்ணி *ஓடியோடிப்பலபிறப்பும்* என்கிறபடியே பிறப்பதிறப்பதாய் *வேத நூல் பிராயம் நூறு மனிசர்தாம் புகுவரேலும் பாதியும் உறங்கி*க் கழிப்பது, *நின்றதிற்பதினையாண்டி*லே *பேதை பாலகனதாய்க் கழிப்பது, நடுவிலுள்ள காலத்திலே * சூதனாய்க் கள்வனாய்த் தூர்த்தரோடே சேர்ந்து, அற்பசாரங்களை அநுபவிக்கைக்காக அஸேவ்ய ஸேவை பண்ணுவது, அதிலாராமையாலே பரத்ரவ்யாபஹாரம் பண்ணுவது, அதுக்கு மேலே பரஹிம்ஸையிலே ஒருப்படுவது,*பெருநிலத்தாருயிர்க்கெல்லாம் செற்றமேவேண்டி* மனிசரில் துரிசனாயும், பின்புள்ள காலத்திலே *பண்டு காமரானவாறும் பாவையர் வாயமுதமுண்டவாறும் வாழ்ந்தவாறும் ஒக்க உரைத்திருமித் தண்டு காலாவூன்றியூன்றித் தள்ளி நடப்பதாய்க் கொண்டு, பால்யத்தில் அறிவில்லாதவனாயும், யௌவனத்திலே விஷயபரனாயும், வார்த்தக்யத்திலே அசக்த கரணனாயும், இப்படிப் *பழுதே பல பகலும் கழித்துப் *புறம் சுவர் கோலம் செய்து *நண்ணாதார் முறுவலிப்ப நல்லுற்றார் கரைந்தேங்கும்படி முடிவிலே *புட்கவ்வக்கிடப்பது, ஈங்கிதன்மேல் வெந்நரகமென்று அநந்தரம் நரகாநுபவம் பண்ணுவது, அநுபவிக்குமிடத்து * வெஞ்சொலாளர்கள் நமன்தமர் கடியர் கொடிய செய்வனவுள* என்கிறபடியே பயங்கரரான யமகிங்கரருடைய வெவ்விதான சொற்களாலுமீடுபடுவது, அதுக்கு மேலே ரௌரவம்,

மஹாரெளரவம் என்று தொடங்கி உண்டான நரக விஶேஷங்களை அநுபவிப்பது, *பிறர் பொருள் தாரம் என்றிவற்றை நம்பினால் எரிஎழுகின்ற செம்பினாலியன்ற பாவையைத் தழுவுவதாய் இப்படியறுப்புண்பது, சூடுண்பது, தள்ளுண்பதாய், நாநாவிதமான நரகாநுபவம் பண்ணுவது, மீண்டு கர்ப்ப வேதனையை அநுபவிப்பதாய், மாதாவினுடைய கர்ப்பகோளகத்தோடு யம தண்டமோடு வாசியறப் போக்குவரத்து செய்து, *ஒத்தொவ்வாத பல்பிறப்பிலே பிறப்பதாய்ப் படுகிற கண்கலக்கத்தைக்கண்டு *ஏவம் ஸம்ஸ்ருதி சக்ரஸ்தே ப்ராம்யமாணே ஸ்வகர்மபி। ஜீவே து:காகுலே விஷ்ணோ: க்ருபா காப்யுபஜாயதே* என்றும் *நடுவே வந்துய்யக்கொள்கின்ற நாதன்* என்றும் சொல்லுகிறபடியே ராஜாவானவன் தண்ட்யனாயிருப்பான் ஒருவனை ஒவ்வொரு பகுதியாகக் கட்டினால் ஒரு பகுதியிலே இவன்படும் ஈடுபாட்டைக் கண்டு மற்றைப் பகுதிகளைக் கழித்துப் பொகடுமாப்போலே ஈஶ்வரனும் ஒரு கர்மத்திலே இவன் படும் ஈடுபாட்டைக்கண்டு ஒரு கர்மத்தினுடைய முடிவிலே ஒரு கர்மம் ஆரம்பிப்பதற்கு முன்னே நடுவே நிர்ஹேதுககடாக்ஷத்தைப்பண்ணா நிற்கும். இதடியாக இவன் பக்கலிலே யாத்ருச்சிக ஸுக்ருதம் பிறக்கும். இத்தாலே ஸத்வம் ப்ரகாஶிக்கும். *ஸத்வம் விஷ்ணு ப்ரகாஶகம்* என்கிறபடியே ஸத்வகுணத்தாலே பகவத்ப்ரபாவம் நெஞ்சிலே படும். இது நெஞ்சிலே படப்பட த்யாஜ்யோபாதேயவிபாகம் பிறக்கும். இதறிகைக்காக ஶாஸ்த்ராபேக்ஷை பிறக்கும். இந்த ஶாஸ்த்ரஶ்ரவணம் பண்ணுகைக்காக ஆசார்யாபேக்ஷை பிறக்கும். அவ்வபேக்ஷை பிறந்தவாறே *தத்வித்தி ப்ரணிபாதேந பரிப்ரச்நேந ஸேவயா। உபதேக்ஷ்யந்தி தே ஜ்ஞாநம் ஜ்ஞாநிந: தத்வ தர்சிந:॥* என்கிறபடியே ஆசார்யாநுவர்த்தநம் பண்ணும். அவ்வநுவர்த்தநத்தாலே இவனளவிலே ப்ரஸாதம் பிறக்கும் *ஆசார்யவான் புருஷோ வேத* என்கிறபடியே ஆசார்ய னானவர் இவன் பக்கலிலே தனக்குப் பிறந்த ப்ரஸாதமடியாக அர்த்தோப தேஶத்தைப் பண்ணாநிற்கும். இவ்வர்த்தோபதேஶத்தாலே *பாணனார் திண் ணமிருக்க*

என்கிறபடியே இவனுக்கு அத்யவஸாயம் பிறக்கும். இவ்வத்யவஸாயத்தாலே பகவதங்கீகாரம் பிறக்கும். பகவதங்கீகாரத்தாலே ஸத்கர்ம ப்ரவ்ருத்தி உண்டாகும். இக்கர்ம பரிபாகத்தாலே ஜ்ஞாநம் பிறக்கும். அந்த ஜ்ஞாந பரிபாகத்தாலே ப்ரேம ரூபையான பக்தி பிறக்கும். பக்த்யநந்தரம் பகவத் கடாக்ஷம் பிறக்கும். பகவத் கடாக்ஷ விஶேஷத்தாலே ஸாத்யோபாய நிவ்ருத்தியும் ஸித்தோபாய நிஷ்டையும் பிறக்கும். ஸித்தோபாய நிஷ்டையாலே ப்ரபந்நாதிகாரம் பிறக்கும்.

இப்படிக்கொத்த ப்ரபந்நாதிகாரிக்கு ஸ்வரூப ஸித்தி பிறப்பது தத்வ தர்ஶநத்தாலே. இங்கு தத்வமென்னப் பார்க்கிறது உபாயோபேய தத்வங்களே. *உபாயோபேயத்வே ததிஹ தவ தத்வம் ந து குணௌ* என்கையாலே இவ்வதிகாரிக்கு உபாயோபேயரூபமான தத்வதர்ஶித்வம் உண்டாம்போது ஜ்ஞாதவ்யமாய் இருப்பது மூன்றுயிருக்கும் – தத்வத்ரய விஷய ஜ்ஞாநமும், தத்வத்வய விஷய வைராக்யமும், தத்வைகவிஷய பக்தியும். இதிலே தத்வத்ரய விஷய ஜ்ஞாநமாவது அசித் விஷய ஜ்ஞாநமும், சித் விஷய ஜ்ஞாநமும் ஈஶ்வர விஷய ஜ்ஞாநமுமே. அசித்து த்யாஜ்யதயா ஜ்ஞாதவ்யம். சித்து த்யாஜ்யோபாதேயதயா ஜ்ஞாதவ்யம். ஈஶ்வரன் உபாதேயதயா ஜ்ஞாதவ்யன். இதில் அசித்து மூன்றுபடியாய் இருக்கும் – அவ்யக்தம் என்றும், வ்யக்தம் என்றும், காலம் என்றும். இதில் வ்யக்தத்தினின்றும் மஹான் பிறக்கும். மஹானினின்றும் அஹங்காரம் பிறக்கும். அஹங்காரத்தினின்றும் ஸாத்விக ராஜஸ தாமஸரூபங்களான குணத்ரயங்கள் பிறக்கும். அதிலே ஸாத்விக அஹங்காரத்தினின்றும் ச்ரோத்ர த்வக் சக்ஷுர் ஜிஹ்வா க்ராணங்களாகிற ஜ்ஞாநேந்த்ரியங்கள் ஐந்தும், வாக் பாத பாணி பாயு உபஸ்தங்கள் என்கிற கர்மேந்த்ரியங்கள் ஐந்தும், இந்த்ரிய கூடஸ்தமான மநஸ்ஸும் ஆக இந்த்ரியங்கள் பதினொன்றும் பிறக்கும். தாமஸாஹங்காரத்தினின்றும் சப்த ஸ்பர்ஶ ரூபரஸ கந்தங்களும் தத்குணரூபமான ப்ருத்வீ அப்பு தேஜோ வாயு

ஆகாஶங்கள் என்கிற பஞ்சபூதங்களும் பிறக்கும். ராஜஸ அஹங்காரம் இரண்டுக்கும் ஸஹகாரியாயிருக்கும். ஆகவிப்படி வ்யக்தமாகிறது இருபத்து மூன்று தத்வமாயிருக்கும்.

அவ்யக்தமானது இவ்யக்தத்துக்கும் காரணமாய் குணத்ரயங்களினுடைய ஸாம்யாவஸ்த்தையை உடைத்தாய் மூலப்ரக்ருதி ஶப்தவாச்யமாய் *முடிவில் பெரும் பாழ்* என்று சொல்லும்படியாய் இருக்கும். இனி, காலமும் அசித் விஶேஷமுமாய், நித்யமாய், ஜடமாய், நிமேஷ காஷ்டாதி விகாரங்களை உடைத்தாய் எம்பெருமானுக்கு ப்ரகாரதயா ஶேஷமாய் இருக்கும். இவ்வசித்தை இருபத்து நான்கு தத்வமாக ப்ரதமாசார்யரும் *மங்கவொட்டு* என்கிற பாட்டிலே அநுஸந்தித்தருளினர். ஆக இவ்வசித்தத்வம் நித்யமாய், ஜடமாய், விபுவாய், குணத்ரயாத்மகமாய் ஸததபரிணமியாய், ஸந்ததக்ஷணக்ஷரண ஸ்வபாவமாய், ஸர்வேஶ்வரனுக்கு லீலோபகரணமாய் இருக்கும்.
அநந்தரம் சித் ஸ்வரூபம் இருக்கும்படி என்னென்னில், அப்ராக்ருதமாய் ஜ்ஞாநஸ்வரூபமாய், ஜ்ஞாநகுணகமாய், அஹம்புத்திகோசரமாய், ஆநந்த ரூபமாய், உத்க்ராந்திகத்யாதிகள் உண்டாகவே அநுபூதமாகையாலே தீபமும் ப்ரபையும் போலே ஸ்வரூபஸ்வபாவத்தை உடைத்தாய், அநேகமாய், அகார வாச்யனான எம்பெருமானுக்கு அப்ருதக்ஸித்தவிஶேஷணமாய் இருக்கும். திருமாலையாண்டான் பெரிய முதலியாரைப் பார்த்து *ஆத்மாவினுடைய வேஷம் இருக்கும்படி என்?* என்று விண்ணப்பம் செய்ய, *ஶேஷத்வமும் பாரதந்த்ர்யமும்காண் வேஷமாய் இருப்பது* என்றருளிச்செய்தார். கூரத்தாழ்வான் *இவ்வாத்மாவுக்கு உஜ்ஜீவநம் எம்பெருமானுடைய க்ருபை* என்று பணிக்கும். முதலியாண்டான் *ஈஶ்வர ஸ்வாதந்த்ர்யம் உஜ்ஜீவநம்* என்று நிர்வஹிப்பர். நம்பிள்ளையை *ஆத்மஸ்வரூபம் இருக்கும்படி என்?* என்று கேட்க, *உன் இணைத்தாமரைகட்கு அன்புருகி நிற்குமது* என்றருளிச்

செய்தார். இப்படிக்கொத்த ஆத்மாக்களும் மூன்று படியாயிருக்கும் – நித்யர் என்றும் முக்தர் என்றும் பத்தர் என்றும். நித்யராவார் அஸ்ப்ருஷ்ட ஸம்ஸார கந்தராய், பகவதிச்சையாலே அவனுடைய திவ்ய குணங்களோபாதி நித்ய பூதராய் *யத்ர பூர்வே ஸாத்யாஸ்ஸந்தி தேவா :* என் றும் *விண்ணுட்டவர் முதுவர்* என்றும் சொல்லலாம்படியான அனந்த கருட விஷ்வக்ஸேந ப்ரப்ரு திகளான ஸூரிகள். முக்தராவார் சந்த்ரைகத்வம் ச்ருதமானாலும் சாக்ஷுஷ மான திமிரதோஷம் நிவ்ருத்தமாகாமையாலே சந்த்ரத்வித்வபுத்தி அநுவர்த் திக்குமோபாதி *ப்ரக்ருதே : பரம்* என்கிற ச்ராவண ஜ்ஞாநம் உண்டேயாகி லும், ஆத்ம ஸாக்ஷாத்காரம் இல்லாமையாலே பின்னையும் தேஹாத்மாபி மானம் அநுவர்த்திக்க, ஸதாசார்ய ப்ரஸாதத்தாலே ஆத்ம ஸாக்ஷாத்காரமும் பிறந்து அதடியாக தேஹாத்மாபிமானம் நிவ்ருத்தமாயும், பகவதேக பார தந்த்ர்ய ஸாக்ஷாத்காரத்தாலே ஸ்வஸ்வாதந்த்ர்யம் நிவ்ருத்தமாயும், பகவதேக போக்யதாவிஷய ஸாக்ஷாத்காரத்தாலே விஷயாந்தர ருசி நிவ்ருத்தமாயும் அந்த ஜ்ஞாந விஶேஷத்தாலே *அதனிற் பெரிய என் அவா* என்கிறபடியே கங்குகரையுமறப் பெருகுகிற காவேரி போலே நடக்கிற பகவத் ப்ரேமமெ ன்ன, ப்ரேமாநுரூபமாக நடக்கிற பகவந்நிரந்தராநுபவாத்மகதையென்ன, அந்த அநுபவ விரோதியான தேஹபரித்யாகமென்ன, சதாதிக நிஷ்க்ரமண மென்ன, அர்ச்சிராதி மார்க்க கமனமென்ன, அவ்வர்ச்சிராதி மார்க்க கமனத் தோடே போம்போது *சூழ் விசும் பணி முகில் தூரியம் முழக்கின ஆழ்கடல் அலைதிரை கையெடுத்தாடின* என்கிறபடியே ஆகாஶமானது மேகமுகத்தா லே திரைகளாகிற கைகளை எடுத்து ஸஸம்ப்ரமந்ருத்தம் பண்ண, *ஓம்கார ரதமாருஹ்ய* என்கிற படியே ப்ரணவமாகிற தேரிலேயேறி மநோரதத்தோடே கூடிக்கொண்டு மநஸ்ஸானது ஸௌமநஸ்யம் தோன்றும்படி ஸாரத்யம் பண்ணி, வாயு லோகத்திலே சென்றவளவிலே அவனும் தன்னுடைய பாவந த்வம் தோற்றும்படி ஸத்கரிக்க, அநந்தரம், *தேரார் நிறைகதிரோன் மண்டலத் தைக் கீண்டுபுக்கு* என்கிறபடியே ஆதித்ய மண்டலத்தைக் கீண்டுபுக்கு,

அவ்வருகே சந்த்ர லோகத்தைக் கிட்டி அநந்தரம் வித்யுத்புருஷன்எதிர் கொள்ள, அவ்வருகே வருணலோகத்திலே சென்று, இந்த்ரலோகத்திலே சென்று, ப்ரஜாபதி லோகத்திலே சென்று, அங்குள்ளாரடையப்பூர்ணகும்பம் வைப்பார் தோரணம் நாட்டுவார் மங்களதீபம் வைப்பார் மாலைகள் கொண்டு நிற்பார் ஏத்துவார் சிறிதுபேர் வாழ்த்துவார் வணங்குவாராய் *வழியிது வைகுந்தற்கு* என்று இப்படித்தந்தாம் எல்லையளவும் வந்து தர்ஶிக்க, அவ்வருகே போய் அண்டகபாலத்தைக் கீண்டு தசகுணோத்தரமான ஏழாவரணத்தையும் கடந்து அநந்தரம் மூலப்ரக்ருதியைக் கடந்து ஸம்ஸாரமறப் பரமபதத்துக் கெல்லையான விரஜையிலே வாஸநாதோஷம் கழித்து அதிலே குளித்து அழுக்கறுப்புண்டு ஸூக்ஷ்மஶரீரத்தைக் கழித்து அப்ராக்ருததிவ்யவிக்ரஹ பரிக்ரஹத்தைப் பண்ணி யௌவராஜ்யோந்முகனான ராஜகுமாரன் பட்டத்துக்குரிய ஆனையைமேற்கொண்டுவருமாப்போலே *நலமந்தமில்லதோர் நாட்டிலே புக்கு *ஐரம்மதீயம்* என்கிற ஸரஸைக் கிட்டினவளவிலே பர்த்ரு ஸகாஶத்துக்குப் போம் பெண்பிள்ளையை ஒப்பித்துக்கொண்டு போமாப்போலே *நிதியும் நற்சுண்ணமும் நிறைகுட விளக்கமும் மதிமுகமடந்தையர் ஏந்தினர் என்கிறபடியே ப்ரஹ்மாநுபவத்துக்கு அநுரூபமாக அலங்கரித்துக் கொண்டு *கலங்காப் பெருநகரான பரமபதத்திலே சென்ற வளவிலே, *பதியினிற்பாங்கினில் பாதங்கள் கழுவுவார், *தொடர்ந்தெங்கும் தோத்திரம் பண்ணுவார், *கொடியணி நெடுமதிள் கோபுரத்து வாசலிலே சென்றுபுக்கு *முடியுடைவானவர் முறைமுறை எதிர்கொள்ள* த்திருமாமணிமண்டபத்திலே சென்றவளவிலே *எதிரெதிரிமையவர் இருப்பிடம் வகுப்பார், கதிரவர் அவரவர் கைந்நிரை காட்டுவாராய்க் கொண்டு பார்த்தவிடம் எங்கும் அஞ்ஜலிபந்தமாம்படி மங்களாஶாஸனம் பண்ணுவாராய் இவனுடைய ஸம்ஸாரதாபமடையப் போம்படி அம்ருததாரைகளை வர்ஷித்தாற்போலே அழகிய கடாக்ஷங்களாலே எளியப்பார்ப்பாராய் இப்படி இவர்கள் ஆதரிக்க திவ்ய பர்யங்கத்தைக்கிட்டி *முத்தினைமணியை* என்கிறபடியே முக்தாவலிக்

கெல்லசம் நாயகரத்நமான ஸ்ரீவைகுண்டநாதனைக் கண்டு வேரற்ற மரம் போலே விழுந்தெழுந்திருப்பதாக, அவனும் *அங்கே பரதமாரோப்ய* என்னுமாப் போலே அரவணைத்து அடியிலே வைக்க, அவனுடைய திவ்யமங்கள விக்ரஹாநுபவமென்ன தத்குணாநுபவமென்ன, தத்கைங்கர்யாநுபவமென்ன இப்படி ஸவிபூதிக ப்ரஹ்மாநுபவம் பண்ணும் பாக்யாதிகாரிகள்.

பத்தராவார் சேற்றிலேயிருக்கிற மாணிக்கம் போலவும், ராஹுக்ரஸ்தனான சந்த்ரனைப் போலவும் பகவச்சே.ஷபூதரான ஆத்ம ஸ்வரூபராய், இருக்கச் செய்தேயும் அநாத்யவித்யையாலே திரோஹித ஸ்வரூபராய், இருட்டறையிலே புக்கு வெளிநாடு காணமாட்டாதாப் போலே இருப்பாராய், சார்ந்த இருவல் வினைகளாகிற இரட்டை விலங்காலே கட்டுண்டு திரியக் கடவராய் ஶப்தாதி விஷயப்ரவணராய் ப்ரஹ்மா தலையாக எறும்பு கடையாக நடுவுள்ள ஆத்ம ஜாதிகள்.

அநந்தரம் ஈஶ்வரனுடைய ஸ்வரூபம் மூன்றுபடியாய் இருக்கும் – நியந்த்ருத்வம் என்றும் வ்யாபகத்வம் என்றும் உபயலிங்க விஶிஷ்டத்வம் என்றும். இதிலே நியந்த்ருத்வமாவது – உபயவிபூதியும் தான்இட்ட வழக்காம்படி அவற்றுக்கந்தராத்மதயா நியமித்துக் கொண்டு நிற்கும் நிலை. வ்யாபகத்வமாவது தன் ஸ்வரூபைக தேஶத்திலே உபயவிபூதியும் தரிக்கும்படி விபுவாயிருக்கை. உபயலிங்க விஶிஷ்டத்வமாவது ஹேய ப்ரதிபடத்வமும், கல்யாணைகதாநத்வமும். ஹேயப்ரதிபடத்வமாவது *உலகுநின்னொடொன்றி நிற்க வேறு நிற்றி* என்கிறபடியே தத்கத தோஷம் தட்டாதிருக்கை. கல்யாணைகதாநத்வமாவது சுபாஶ்ரயத்வம். ஆக இவ்விரண்டாலும் அநிஷ்ட நிவ்ருத்தியும் இஷ்டப்ராப்தியும் சொல்லுகிறது. அதாகிறது உபாயோபேயத்வங்களிறே ஈஶ்வரனுக்கு ஸ்வரூபம். ஆக அசித்து ஜ்ஞேயதைக ஸ்வரூபத்தாலே போக்யமாயிருக்கும். ஆத்மா ஜ்ஞாத்ருதைக ஸ்வரூபத்தாலே போக்தாவாயிருக்கும். பரமாத்மா

நியந்த்ருதைக ஸ்வபாவத்தாலே ஈஶ்வரனும் இருக்கும். இப்படி மூவருடைய ஸ்வரூபத்தையும் அறிந்தபின்பு உபயவிபூதிக்கும் ஈஶ்வரியான பிராட்டி ஸ்வரூபம் அசித் கோடியிலேயோ ஆத்ம கோடியிலேயோ ஈஶ்வர கோடியிலேயோ என்று நிரூபித்தால் அறிவுண்டாகையாலே அசித் கோடியிலன்று. ஐஶ்வர்யத்தாலே ஆத்ம கோடியிலன்று. நித்யபாரதந்த்ர்யத்தாலே ஈஶ்வரகோடியிலன்று. ஆனால் தத்வம் நாலாகிறதோ என்னில் அதுக்கு ப்ரமாணோபபத்திகளில்லை. ஆனால் இவளுடைய ஸ்வரூபம் அறுதியிடும்படி என்னென்னில் நிரூபக விஶேஷணம் நிரூபித விஶேஷணம் என்று இரண்டாய், சேதநன் நிரூபித விஶேஷணமாய் இவள் நிரூபக விஶேஷணமாய் இருக்கும். ஆனால், *அஸ்யேஶாநா ஜகத:* என்றும் *ஈஶ்வரீம் ஸர்வபூதாநாம்* என்றும் ச்ருதிகளிலே ஈஶ்வரியாக ஓதிப் போருகையாலே ஈஶ்வர கோடியிலேயாகக் குறையென்னென்னில் அப்போது நாட்டுக்கிரண்டீஶ்வரர்கள் கூடாமையாலும் *பதிம் விஶ்வஸ்யாத்மேஶ்வரம்* *க்ஷராத்மாநாவீசதே தேவ ஏக:* என்று தொடங்கியுண்டான ப்ரமாண பரம்பரைகளுக்கு விரோதம் பிறக்கையாலும் யுக்தியில்லாமையாலும் ஈஶ்வரத்வம் கூடாது. அங்கு ஓதிப்போருகிற ஈஶ்வரத்வம் பத்நீத்வ நிபந்தநமாகக் கடவது. ராஜமஹிஷியை ஸோபசாரமாகச் சொல்லாதபோது அவனுடைய ரோஷத்துக்கிலக்காமித்தனையிறே. *பும் ப்ரதாநேஶ்வரேஶ்வரீம்* என்று தொடங்கி இவளுடைய வைபவங்களை ப்ரதிபாதிக்கிற ப்ரதேஶங்களிலே அவளுடைய போக்யதாதிஶயத்தைச் சொல்லுகிறதித்தனை. ஆனால் ஈஶ்வரனைப்போதி இவளுக்கும் ஜகத்காரணத்வம் உண்டாகத்தடை என்னென்னில் ஒருவனுக்குக் காரணத்வம் உண்டாம் போது க்ராஹக ஸாமர்த்யத்தாலும் அந்வய வ்யதிரேகத்தாலும் அர்த்தாபத்தியாலும் ஶ்ருத்யாதி ப்ரமாணங்களாலுமிறே உண்டாகக்கடவது. இவளுக்குக் காரணத்வஶக்தி உண்டாகையாலே தர்மி க்ராஹகத்வம் உண்டு. ப்ரபஞ்சம் இவள் பார்த்தபோது உண்டாய் ததபாவத்தில் இல்லாமையாலே அந்வயவ்யதிரேகம்உண்டு. இதுதன்னாலே அர்த்தாபத்தியுண்டு. பகவச்சாஸ்த்ரங்களிலே

காரணத்வ ஸூசகங்களான ப்ரமாணங்களுண்டு. ஆகையாலே காரணத்வம் உண்டாகக் குறை என்னென்னில் ஶாக்திமத்த்வம் குணத்தாலல்ல, பத்நீத்வ நிபந்தநம். வீக்ஷணுதீந வ்ருத்திமத்த்வமாகக் கடவது அந்வய வ்யதிரேகம். இத்தாலே ஜகத்ஸித்தியில் இவளையொழிய உபபத்தியுண்டு.ஶ்ருத்யாதி ப்ரமாணங்களும் ப்ரஹ்மாத்மகமான ஜகத்தினுடைய விலோகநபரங்களாய் இருக்கும். ஆகையாலே இவளுக்குக்காரணபாவத்தில் அந்வயமில்லை."ஈஶ்வரன் லக்ஷ்மீ விஶிஷ்டனுயன்றே காரணபூதனுகிறது. ஆகையால் இவளுக்கும் காரணத்வத்திலே அந்வயம் உண்டாகக்குறையென்?" என்னில், அவன் லீலா விபூதியை ஸ்ருஷ்டிக்கும்போது நித்யவிபூதி விஶிஷ்டனுயன்றே இருப்பது. அப்போதுநித்யவிபூதிக்கும் காரணத்வம் உண்டாகிறதோ?அவ்வோபாதி அவளுக்கும் காரணத்வமில்லை.ஆனுல் இவளுக்கு ஜகத்ஸ்ருஷ்ட்யாதி காரணத்வத்தில் ஓர் அந்வயமில்லையோவென்னில் அநுமோதநத்தால் வரும் அந்வயம் உண்டு. காரணவஸ்துவே உபாஸ்யமுமாய் ஶரண்யமுமாகையாலே இவளுக்கு உபாய பாவத்தில் அந்வயமில்லை. இவளுக்கு உபாய பாவத்தில் அந்வயம் உண்டாக ப்ரமாணங்கள் உண்டேயென்னில் அது ஶரண்யனுடைய இச்சாநுவிதாயித்வமாகக்கடவது.*யதா ஸர்வகதோ விஷ்ணு: ததைவேயம் த்விஜோத்தம* என்று தொடங்கி இவளுடைய வ்யாப்தி சொல்லாநின்ற திறேயென்ன, ரிஷி தானே விபாகம் பண்ணுகையாலே ஸ்வவிபூதி ஶரீரங்களில் உண்டான வ்யாப்தியொழிய ஸர்வத்ர வ்யாப்தியில்லை. இந்த வ்யாப்தி தான் குணத்தால் வருவதொன்றிறே, ஸௌபரியைப் போலே. ஆனுல் இவள் சேதநஸமானையோவென்னில் அப்படியன்று.பத்தரிற்காட்டில் முக்தர் வ்யாவ்ருத்தர். முக்தரிற் காட்டில் நித்யர் வ்யாவ்ருத்தர். நித்யரிற் காட்டில் அநந்தகருடாதிகள் வ்யாவ்ருத்தர். அவர்களிற்காட்டில் தேவீஜநங்கள் வ்யாவ்ருத்தர். தேவீஜநங்களிற்காட்டில் பூநீளைகள் வ்யாவ்ருத்தர்.பூநீளைகளிற்காட்டில் இவள் வ்யாவ்ருத்தை. ஆகையாலேயிறே உபயவிபூதிக்கும் ஈஶ்வரியாய்ப் போருகிறது. இவளுக்கு ஸ்வரூபத்தாலே சேதந ஸாம்யம் உண்டு. ஸ்வபாவத்தாலே

ஈஶ்வர ஸாம்யம் உண்டு. இது நித்யருக்கும் முக்தருக்கும் உண்டோவென்னில் இவர்களுக்குமின்றியிலே தேவீஜநங்களுக்குமின்றியிலே ஈஶ்வரன்தனக்குமின்றியிலே இருப்பன சிலகுணவிஶேஷங்களுண்டு. அவை எவையென்னில் நிரூபகத்வம் என்றும் ஆநுரூப்யம் என்றும் அபிமதத்வம் என்றும் அஶேஷஶேஷித்வ ஸம்பந்தத்வாரபாவம் என்றும் ஆஶ்ரயண ஸித்தியென்றும் ப்ராப்யபூரகத்வம் என்றும். இவ்வர்த்தத்தை அபியுக்தரும் வெளியிட்டார்கள். *திருவினுக்கரசே* *திருமாலே* என்று நிரூபகத்வத்தையும் *உனக்கேற்கும் கோலமலர்ப் பாவை* என்று ஆநுரூப்யத்தையும், *அல்லிமலர்மகள் போக மயக்குக்கள்* என்று போக்யதையையும் *பூவின் மிசைநங்கைக்கும் இன்பன்* என்று அபிமதத்வத்தையும், *திருமாமகளாலருள்மாரி* *திருமாலாலருளப்பட்ட சடகோபன்* என்று அஶேஷஶேஷித்வ ஸம்பந்தத்வாரபாவத்தையும் *திருக்கண் டேன் பொன் மேனி கண்டேன்* என்று ஆஶ்ரயண ஸித்தியையும், *திருமாலடியார்களைப் பூசிக்க நோற்றார்கள்* என்று ததீயபர்யந்தமான ப்ராப்ய பூரகத்வத்தையும் வெளியிட்டார்கள். ஆக இந்த குணங்களாலேயிறே இவள் ஸர்வாதிசயகாரியாய் இருப்பது. *திருமாமகள் கேள்வா தேவா* என்றும் *பெருமையுடைய பிரானார்* என்றும் எம்பெருமானுக்கு ஶேஷித்வ பூர்த்தி பிறப்பது இவளாலே. இவளுடைய ஸத்தை எம்பெருமான் இட்ட வழக்காய் இருக்கும். எம்பெருமானுடைய ஐஶ்வர்யம் இவள் இட்ட வழக்காய் இருக்கும்.

இருவருடைய ஸ்வரூபமும் பூவும் மணமும் போலேயிறே. பூவையொழிய மணத்துக்கு ஸத்தை இல்லை. மணத்தையொழிய பூவுக்கேற்றம் இல்லை. ஆதித்யனையும் ப்ரபையையும் போலே இருவருடைய ஸம்பந்தமும் அவிநாபூதமாய் இருக்கும். இருவரையும் பிரித்துக் காண்பார் உண்டாகில் சூர்ப்பணகையும் ராவணனும் பட்டது படுவார்கள். ஆகையிறே *திருமாலே நானும் உனக்குப் பழவடியேன்* என்று ஶேஷத்வ ப்ரதிஸம்பந்தி ஒரு மிதுநமாய் *நாளும் நம் திருவுடையடிகள் தம் நலங்கழல் வணங்கி* என்று ஆஶ்ரயண ப்ரதிஸம்பந்தி ஒரு மிதுநமாய் *அடிமை செய்வார் திருமாலுக்கே* என்று

கைங்கர்ய ப்ரதிஸம்பந்தியும் ஒரு மிதுநமாய் இருப்பது, இத்தாலேயிறே பாஷ்யகாரரும் *மிதுநமொழிய வஸ்துவில்லை* என்று அறுதியிட்டது. மத்ஸ்யத்தினுடைய ஆகாரமெல்லாம் ஜலமயமாய் இருக்குமோபாதி ஸ்ரீமானுடைய வடிவெல்லாம் ஸ்ரீமயமாய் இருக்கும் என்று பெரியமுதலியாரும் நஞ்சீயரும் அருளிச்செய்து போருவர்கள். ஏவம்பூதமான மிதுந வஸ்துவுக்குப்பரதந்த்ரம் ஆத்மவஸ்து .ஆத்மவஸ்துவுக்குப்பரதந்த்ரம் அசித் வஸ்து. இப்படி வஸ்துத்ரய யாதாத்ம்யஜ்ஞாநம் பிறக்கை தத்வத்ரயஜ்ஞாநமாவது. அநந்தரம் தத்வத்வய விஷய வைராக்யமாவது என்னென்னில், சேதநனாய் இருப்பான் ஒருவனுக்குப்புருஷார்த்தம் மூன்று படியாய் இருக்கும். ஐஸ்வர்யம் என்றும் கைவல்யம் என்றும் பகவத் ப்ராப்தி என்றும். இதில் ஐஸ்வர்யம் மூன்றுபடியாய்இருக்கும் –ராஜபதம் என்றும் இந்த்ரபதம் என்றும் ப்ரஹ்ம பதம் என்றும். கைவல்யமாவது *சிறுக நினைவதோர் பாசமுண்டாம் பின்னும் வீடில்லை* என்றும், *தெரிவரிய அளவில்லாச் சிற்றின்பம்* என்றும் சொல்லுகிறபடியே ஐஸ்வர்யத்தைக் காட்டில் வ்யாவ்ருத்தி உண்டாயிருக்கச் செய்தேயும் பகவதநுபவம் இல்லாமையாலே விதவாலங்கார ஸத்ருஶமாம்படி ஸ்வாநுபவம் பண்ணியிருக்கை. ஆக ஜட ரூபமான ஐஸ்வர்யத்தையும் சிற்றின்பமான கைவல்யத்தையும் விடுகை தத்வ த்வயவிஷய வைராக்யமாவது. இனி தத்வைக விஷய பக்தியாவது – *தத்வமேகோ மஹாயோகீ* என்று சொல்லுகிறபடியே எம்பெருமான் பக்கலிலே அநவரத பாவனையாய்ச் செல்லக்கடவதான ப்ரேமம்.பக்தி தான் மூன்றுபடியாய் இருக்கும் – பக்தி என்றும் பரபக்தி என்றும் பரமபக்தி என்றும். *பத்துடை அடியவர்க்கெளியவன்* என்றும் *பக்திக்ரீதோ ஜநார்த்தந :* என்றும் சொல்லுகிறபடியே இந்த பக்தியாலே ஏவிக்கொள்ளலான அகார வாச்யனுடைய ஆகாரமும் மூன்றுபடியாய் இருக்கும். *நீர்ப்பூ, நிலப்பூ, மரத்திலொண்பூ*என்று ப்ரதமாசார்யரும் அருளிச்செய்தார். மரத்தில் ஒண்பூ என்கையாலே பரத்வம் சொல்லுகிறதாய் நீர்ப்பூ என்கையாலே வ்யூஹம் சொல்லுகிறதாய் நிலப்பூ என்கையாலே

அவதாரம் சொல்லுகிறது. ஆனுல் அந்தர்யாமித்வமும் அர்ச்சாவதாரமும் சொல்லவேண்டாவோ என்னில், பரத்வாந்தர்பூதம் அந்தர்யாமித்வம். அவ தாரவிஶேஷம் அர்ச்சாவதாரம். ஆகையாலே ஈஶ்வரனுடைய ஆகாரம் மூன்று என்னத்தட்டில்லை. இப்படி ஆகார த்ரய விஶிஷ்டனுன எம்பெருமானை ப்ரா பிக்கக்கடவனுன சேதநனுடைய ஸ்வரூபமும் மூன்றுபடியாய் இருக்கும் – அநந்யார்ஹத்வம் என்றும் அநந்ய ஸாதநத்வம் என்றும் அநந்ய ப்ரயோஜந த்வம் என்றும். இருவரையும் சேரவிடக்கடவளான பிராட்டி ஸ்வரூபம் ஶேஷ த்வபூர்த்தி என்றும் புருஷகாரத்வம் என்றும் கைங்கர்ய வர்த்தகத்வம் என்றும் மூன்றுபடியாய் இருக்கும். இவனை ப்ரதமத்திலே அங்கீகரித்த ஆசார்யனுடைய ஸ்வரூபம் மூன்றுபடியாய் இருக்கும் – அஜ்ஞாந நிவர்த்தகத்வம் என்றும் ஜ்ஞாநப்ரதத்வம் என்றும் ருசிஜநகத்வம் என்றும். இவனுக்கு வரக்கடவதான விரோதி ஸ்வரூபம் மூன்று படியாய் இருக்கும் –ஸ்வரூப விரோதி என்றும் உபாயவிரோதி என்றும் ப்ராப்யவிரோதி என்றும். இந்தவிரோதிக்கு இர ட்டைவித்தாய்ப்போருகிற அஹங்காரமமகாரமும் மூன்றுபடியாய் இருக்கும் – அஜ்ஞாநதஶையில் ஓர் அஹங்காரமமகாரமும், ஜ்ஞாநதஶையில் ஓர் அஹ ங்காரமமகாரமும். போகதஶையில் ஓர் அஹங்காரமமகாரமும். இந்த அஹங் கார மமகார ஹேதுவான அஜ்ஞாநம் மூன்றுபடியாய் இருக்கும் – ஜ்ஞாநாநுத யம் என்றும் விபரீத ஜ்ஞாநம் என்றும் அந்யதாஜ்ஞாநம் என்றும். இதில், ஜ்ஞாநாநுதயமாவது தேஹாத்மாபிமாநம். விபரீதஜ்ஞாநமாவது ஸ்வ ஸ்வாத ந்த்ர்யம். அந்யதாஜ்ஞாநமாவது தேவதாந்தர ஶேஷத்வம். இந்த அஜ்ஞாநத் தைப்பற்றிவரும் அபசாரமும் மூன்றுபடியாய் இருக்கும்–பகவத பசாரம், பாக வதாபசாரம் அஸஹ்யாபசாரம் என்று. இந்த அபசாரத்தைப்பற்றி வரும் அக, மும் மூன்றுபடியாய் இருக்கும்–பூர்வாக,மென்றும் உத்தராக,மென்றும் ப்ராரப் த,மென்றும். இதனடியாக வரக்கடவதான தாபமும் மூன்றுபடியாய் இருக்கும் –ஆத்யாத்மிகம் என்றும் ஆதிபௌதிகம் என்றும் ஆதிதைவிகம் என்றும். இப்படிக்கொத்தபாபத்தைக்குடநீர்வழியும் பொழுது விவேக ஜலம் வேண்டும்.

இந்த விவேக ஜலம்தான் மூன்றுபடியாய் இருக்கும் – ஆத்மாநாத்ம விவேகம் என்றும் புருஷார்த்தாபுருஷார்த்த விவேகம் என்றும் உபாயாநு பாய விவேகம் என்றும். இந்த விவேகத்துக்கு ஸ்தாநமாய் இருப்பதும் மூன்று படியாய் இருக்கும் – தத்வம் என்றும் அபிமதம் என்றும் விதாநம் என்றும். இதில் ஸ்வரூப ப்ரதிபாதகமான திருமந்த்ரம் தத்வமாவது. புருஷார்த்த ப்ரதிபாதகமான மந்த்ரரத்நம் அபிமதமாவது. ஹிதவிதாயகமாய் ஶரண்யாபி மதியாலே ப்ரவ்ருத்தமான சரமஶ்லோகம் விதாநமாகிறது. இதிலே தத்வ ரூபமான திருமந்த்ரமும் பதரூபத்தாலே மூன்றுபடியாய் இருக்கும். இதிலே ப்ரதம பதத்தாலே சேதநனுடைய ஸ்வரூபம் சொல்லுகிறது. மத்யம பதத் தாலே ஸ்திதி சொல்லுகிறது. த்ருதீய பதத்தாலே வ்ருத்தி சொல்லுகிறது. இந்த ஸ்வரூப ஸ்திதி ப்ரவ்ருத்திகள் மூன்றும் எம்பெருமான் இட்ட வழக்காய் இருக்கும். ப்ரதம பதத்தாலே இவனுடைய அநந்யார்ஹத்வம் சொல்லுகிறது. மத்யம பதத்தாலே அநந்ய ஶரணத்வம் சொல்லுகிறது. த்ருதீய பதத்தாலே அநந்ய போக்யத்வம் சொல்லுகிறது. இவனுக்கு ப்ரதிஸம்பந்தியாய் இருக் கிறவனுடைய ஶேஷித்வம் சொல்லுகிறது ப்ரதம பதத்தாலே. அவனுடைய ஶரண்யத்வம் சொல்லுகிறது மத்யம பதத்தாலே. அவனுடைய போக்யத்வம் சொல்லுகிறது த்ருதீய பதத்தாலே. இந்த ஜ்ஞாநமடியாக அஹங்கார ஜந்ய மான அஜ்ஞாநம் போம்படி சொல்லுகிறது ப்ரதமபதம். அர்த்த ஜந்யமான அஜ்ஞாநம் போம்படி சொல்லுகிறது மத்யம பதம். காம ஜந்யமான அஜ்ஞா நம் போம்படி சொல்லுகிறது த்ருதீய பதம். ப்ரதம பதத்தில் சொல்லுகிற ஜ்ஞாத்ருத்வமும் மத்யம பதத்தில் சொல்லுகிற கர்த்ருத்வமும் த்ருதீய பதத்தில் சொல்லுகிற போக்த்ருத்வமும் எம்பெருமான் இட்ட வழக்காய் இருக்கும். திருமந்த்ரம் ஸாமாந்யேந ஸ்வரூபபரமாய் இருக்கும். சிலர் வாக்யத்ரயம் என்று நிர்வஹிப்பர்கள். சிலர் வாக்யைகவாக்யத்தாலே ஏக வாக்யம் என்று நிர்வஹிப்பர்கள். சிலர் ஸ்வரூபபுருஷார்த்தம் என்று நிர்வஹிப்பர்கள். சிலர் அர்த்தபஞ்சகபரம் என்று நிர்வஹிப்பர்கள். சிலர்

ப்ரபத்தியையும் கூட்டி ஷடர்த்தபரம் என்று நிர்வஹிப்பர்கள். சிலர் ஆத்ம ஸமர்ப்பணபரம் என்று நிர்வஹிப்பர்கள். *திருவெட்டெழுத்தும் கற்றுநான் உற்றதும் உன்னடியார்க்கடிமை* என்று பதக்ரமத்துக்கும் தாத்பர்யமான அர்த்தம் ததீய ஶேஷத்வம் என்று அருளிச் செய்தார் திருமங்கையாழ்வார். ப்ரதமாசார்யரான நம்மாழ்வாரும் பயிலும் சுடரொளியிலே *எம்மை ஆளும் பரமர்* என்றும் *எம்மையாளுடையார்கள்* என்றும் *எமக்கெம்பெரு மக்களே* என்றும் ததீயர்களை ஶேஷிகளாக ப்ரதிபாதிக்கையாலும், *வருமை யும் இம்மையும் நம்மையளிக்கும் பிராக்களே* என்றும்*சன்மசன்மாந்தரம் காப்பரே* என்றும் *நாளுய்யக் கொள்கின்ற நம்பரே* என்றும் ததீயரையே ஶரண்யராக ப்ரதிபாதிக்கையாலும் *எம் தொழுகுலம் தாங்கள்* என்றும் *தம்மடியார் எம்மடிகளே* என்றும் *தம்மடியார் அடியோங்கள்* என்றும் ததீயரையே ப்ராப்யராக ப்ரதிபாதிக்கையாலும் ஆக ப்ரதமபத ஸித்தமான ஶேஷிகளும் ததீயரேயாய், மத்யமபத ஸித்தமான ஶரண்யரும் ததீயரேயாய், த்ருதீயபத ஸித்தமான ப்ராப்யரும் ததீயரேயானபடியாலே திருமந்த்ரத்துக்குத் தாத்பர்யமான அர்த்தம் ததீய ஶேஷத்வம் என்று அறிகை. *நிருபாதிக தேவதா ← பரமாத்மா.நிருபாதிகோயாக :—ஆத்ம ஸமர்ப்பணம். நிருபாதிகோ மந்த்ர :—ப்ரணவ : நிருபாதிகம் ப,லம் – மோக்ஷ : * என்று ஓதுகையாலே ப்ரணவத்துக்குக் கர்மாத்மகத்வம் உண்டு. *ஏதத் ஜ்ஞாநம் ச ஜ்ஞேயம் ச ஶேஷோந்யோ க்ரந்த விஸ்தர : * என்கையாலே ஜ்ஞாநமும் இதுவேயாகக் கடவது. *ஓமித்யாத்மாநம் த்யாயீத* என்கையாலே பக்தியும் இதுவேயாகக் கடவது. *ப்ரஹ்மணே த்வாமஹஸ ஓமித்யாத்மாநம் யுஞ்ஜீத* என்கையாலே ப்ரபத்தியும் இதுவேயாகக்கடவது. ப்ரணவம் ஸ்வரூப யாதாத்ம்யத்தைச் சொல்லுகையாலே *பரம் ஜ்யோதிருபஸம்பத்ய ஸ்வேந ரூபேண அபிநிஷ் பத்யதே* என்று சொல்லுகிற பலமும் இதுவேயாயிருக்கும். ப்ரணவந்தான் அக்ஷர ஸ்வபாவத்தாலே மூன்றுபடியாய் இருக்கும் – அகாரம் என்றும் உகாரம் என்றும் மகாரம் என்றும். அதில் அகாரம் காரணத்வத்தையும் ரக்ஷகத்வத்தை

யும் ஶேஷித்வத்தையும் ஶ்ரிய : பதித்வத்தையும் சொல்லக்கடவதாய் இருக்கும். இதில் காரணத்வத்தாலும் ரக்ஷகத்வத்தாலும் உபாயபாவத்தை வெளியிடுகிறது. ஶேஷித்வத்தாலும் ஶ்ரிய : பதித்வத்தாலும் உபேய பாவத்தை வெளியிடுகிறது. வாச்யபூதனான எம்பெருமானுடைய ஸ்வரூபமும் உபாயோபேயத்வங்களாகையாலே வாசகமான இவ்வகாரமும் உபாயோபேயத்வங்களைச் சொல்லுகிறது. இவ்வகாரத்தில் ஏறிக்கழிந்த சதுர்த்தி எம்பெருமானுக்கு அதிசயகரத்வரூபமான ஶேஷத்வத்தைச் சொல்லுகிறது. இச்சேஷத்வத்தினுடைய ஆஶ்ரயத்தைச் சொல்லுகிறது வ்யஞ்ஜனரூப மகாரம். அகாரத்தாலே ஶேஷித்வத்தைச் சொல்லி மகாரத்தாலே ஶேஷத்வாஶ்ரயமான சேதநனைச் சொல்லி அவதாரணவாசியான உகாரத்தாலே இவர்களுடைய ஸம்பந்தம் அவிநாபூதம் என்கிறது. இக்ரமத்தை அபியுக்தரும் வெளியிட்டார்கள். *கண்ணபுரம் ஒன்றுடையானுக்கு* என்று சதுர்த்யந்தமான அகாரார்த்தத்தை வெளியிட்டு *அடியேன்* என்று மகாரார்த்தத்தை வெளியிட்டு *ஒருவர்க்குரியேனோ* என்று உகாரார்த்தத்தை வெளியிட்டார். *மூன்றெழுத்ததனை மூன்றெழுத்ததனால் மூன்றெழுத்தாக்கி, மூன்றெழுத்தை ஏன்று கொண்டிருப்பார்* என்கிறபடியே நித்யாநுஸந்தானமாயிருப்பது ப்ரணவமிறே. இப்படி ஶேஷத்வத்துக்கு *ஓம்* என்று இசைந்தவர்களுக்கு வரக்கடவதான ஸ்வார்த்தஹாநியைச் சொல்லுகிறது அத்யந்த பாரதந்த்ர்ய ப்ரகாஶகமான மத்யம பதத்தாலே. மத்யமபதந்தான் இரண்டெழுத்தாய் இருக்கும் *நம : * என்று. *அஹமபி மம ந பகவத ஏவாஹமஸ்மி* என்றிறே இதின் அர்த்தம் இருக்கும்படி. ஸம்பந்த ஸாமாந்யவாசியான ஷஷ்டியாலே ஸ்வார்த்ததையைச் சொல்லுகிறது. ஸ்வார்த்தத்வமானது ஸ்வாதந்த்ர்யமும் ஸ்வத்வமும். ஸ்வாதந்த்ர்யமாவது அஹங்காரம். ஸ்வத்வமாவது மமகாரம். அவ்வஹங்காரந்தான் இரண்டுபடியாய் இருக்கும் – தேஹாத்மாபிமான ரூபமென்றும் தேஹாத்பரனான ஆத்மாவினுடைய ஸ்வாதந்த்ர்யாபிமான ரூபம் என்றும். மமதையும் இரண்டுபடியாய் இருக்கும் – தேஹாநுபந்தி போக்ய போகோபகரணாதிகளை விஷயீகரித்திருக்கையும் பாரலௌகிகமான ப,ல தத்ஸாதநங்களை விஷயீகரித்திருக்கையும். ஆக நால்வகைப்பட்டிருக்கிற ஸ்வார்த்தத்வமும் காட்டப்படுகிறது. உகாரத்தாலே பிறர்க்குரியன் அன்று என்றவிடம் சொல்லி நமஸ்ஸாலே தனக்குரியன் அன்று என்றும் சொல்லுகிறது.

ஆகிஞ்சந்யாநந்யகதித்வங்களாலே பூர்ணமாகையாலே ப்ரார்த்தநாரூப

சரணுகதியாகவுமாம். *நமஸ்சக்ருர் ஜநார்த்தநம்* என்று ஸ்தாநப்ரமாணத் தாலே ப்ரபத்தியாகவுமாம். ந்யாஸ வாசகமான நமஶ்ஶப்தமானது ஸாக்ஷாத் உபாயபூதனுன பரமாத்மாவைச் சொல்லுகையாலே முக்ய ப்ரபத்தியாகக் குறையில்லை. இப்படி இங்கு ப்ரபத்தி வாசகமான நமஸ்ஸிலே *மத்யாஜீமாம் நமஸ்குரு* என்று பக்தியும் ஸூசிதையாய்ப் போருகிறது. இப்படி ப்ரதம பதத்தாலே இவனுடைய ஸ்வரூபம் சொல்லி மத்யம பதத்தாலே ஸ்வரூபாநு ரூபமான உபாயம் சொல்லி உபாயாநுரூபமான புருஷார்த்தம் சொல்லு கிறது த்ருதீய பதத்தாலே. இதுதான் *நார* என்றும் *அயன* என்றும் *ஆய* என்றும் மூன்ருயிருக்கும். மகார விவரணமான நார ஶப்தம் ஸமூஹ வாசியாய் இதிலே பஹுவசனமும் பஹுத்வவாசியாகையாலே பஞ்சோப நிஷண்மயமான திவ்யமங்கள விக்ரஹமும் ஜ்ஞாநசக்த்யாதி குணங்களும் திவ்யாபரணங்களும் திவ்யாயுதங்களும் லக்ஷ்மீ ப்ரப்ருதி திவ்யமஹிஷீ வர்க்கமும் நித்யவிபூதியும் ப்ரவாஹரூபேண நடக்கிற லீலாவிபூதியுமாக உபயவிபூதியும் நார ஶப்தத்தாலே சொல்லப்படுகிறது. அதிலுண்டான பஹு வ்ரீஹி ஸமாஸத்தாலும் தத்புருஷ ஸமாஸத்தாலும் அந்தர்யாமித்வமும் ஆதார த்வமும் சொல்லுகிறது. அந்தர்யாமித்வத்தாலே எம்பெருமானுடைய சரீரித் வம் சொல்லுகிறது. ஆதாரத்வத்தாலே அதிஶயம் சொல்லுகிறது. அகார விவரணமான அயநபதத்திலே கர்மணி வ்யுத்பத்தியாலும் கரணே வ்யுத்பத்தி யாலும் ப்ராப்ய ப்ராபகங்கள் சொல்லப்படுகிறது. அதாவது உபாயோபேயத்வங்களிறே. அக;இப்படி ப்ரணவத்தாலே தன் ஸ்வரூபம் பகவதநந்யார்ஹ ஶேஷத்வம் என்று ப்ரதிஜ்ஞை பண்ணி ஸ்வஸ்வாதந்த்ர்ய நிவர்த்தகமான மத்யம பதத்தாலே அத்யந்த பாரதந்த்ர்யம் என்று உபபாதித்து த்ருதீய பதத் தாலே இதுவும் சரீரத்வ நிபந்தனமென்று உபபாதித்துக் கீழ் ப்ரஸ்துதமான ஶேஷத்வமே ஆத்மாவுக்கு ஸ்வரூபம் என்று நிகமிக்கிறது.

சதுர்த்தியாலே ஶேஷஶேஷிகளுடைய போகம் சொல்லுகிறது. *அஹமந் நம்* என்ற ப.லம் *ந மம* என்றும், * படியாய்க்கிடந்துன் பவளவாய்

காண்பேனே* என்றும் சொல்லுகிறபடியே இதில் ஸாக்ஷாத் போகம் எம்பெருமானதாய் சைதந்யப்ரயுக்தமான போகமாயிருக்கும் இவனுக்குள்ள அளவு. இந்த போகந்தான் ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தோசிதமாய் ஸர்வாதிகாரமாய் இருக்கும். ஆக ப்ரதம பதத்தாலே ப்ரக்ருதே: பரத்வ பூர்வகமாக ஸ்வஸ்வரூபத்தைச் சொல்லுகிறது. மத்யம பதத்தாலே ஸாத்யோபாய நிவ்ருத்தி பூர்வகமாக ஸித்தோபாய நிஷ்டையைச் சொல்லுகிறது. த்ருதீய பதத்தாலே ஸ்வபோக நிவ்ருத்தி பூர்வகமாக பரபோக நிஷ்டையைச் சொல்லுகிறது. க்ஷேத்ரஜ்ஞ க்ருத்யமான வரம்பையிட்டுக் கொடுக்கிறது ப்ரதம பதம். இடைஞ்சல் வாராதபடி களையறுத்துக் கொடுக்கிறது மத்யம பதம். விளைந்து ஸ்வாமிக்கு போகம் கொடுக்கிறது த்ருதீய பதம்.

*ப்ரதம பதத்தாலே பாணிக்,ரஹணம் பண்ணுகிறது. மத்யம பதத்தாலே உடைமண நீராட்டுகிறது. த்ருதீய பதத்தாலே சதுர்த்தி படுக்கையாய் இருக்கிறது* என்று பிள்ளையுறங்காவில்லிதாஸர் நிர்வஹிப்பர். *சேஷத்வம் பிறந்ததில்லையாகில் ப்ரதம பதத்தில் அந்வயம் இல்லை. ஜ்ஞாநம் பிறந்ததில்லையாகில் த்விதீய பதத்தில் அந்வயம் இல்லை. ப்ரேமம் பிறந்ததில்லையாகில் த்ருதீய பதத்தில் அந்வயம் இல்லை* என்று பட்டருக்கு எம்பார் அருளிச்செய்வர். *ஸ்வரூப ஸாக்ஷாத்காரம் பிறந்ததில்லையாகில் ப்ரதம பதத்திலொட்டில்லையாகக் கடவது. உபாய ஸாக்ஷாத்காரம் பிறந்ததில்லையாகில் மத்யம பதத்தில் ஒட்டில்லையாகக் கடவது. போக ஸாக்ஷாத்காரம் பிறந்ததில்லையாகில் த்ருதீய பதத்தில் ஒட்டில்லையாகக் கடவது* என்று நம்பிள்ளைக்கு நஞ்சீயர் அருளிச்செய்வர். இப்படி ஸகல நிகமாந்தங்களும் பதத்ரயமான மூலமந்த்ரத்துக்கு விவரணமாய் இருக்கும். இந்த மூல மந்த்ரத்துக்கு த்வயம் விவரணமாய் இருக்கும். இது விவரணமானபடி என்னென்னில் ஈச்வரோபாய மாத்ரமேயாய், புருஷகாரத்தையும் அதினுடைய நித்ய யோகத்தையும் உபாய பாவத்துக்கு உறுப்பான குணவிசேஷங்களையும் அக்குணங்களோ

பாதியான விக்ரஹ வைலக்ஷண்யத்தையும் உபாய விஷயமாக இந்த அதிகாரிக்குண்டாம் வ்யவஸாயத்தையும் அங்குச்சொல்லாமையாலும் இங்கே ஸாப்தமாக ப்ரதிபாதிக்கையாலும் மத்யம பதத்துக்கு பூர்வ வாக்யம் விவரணமாகக் கடவது. இங்கு ஸர்வேஶ்வரனுக்குக் கிஞ்சித்கார ப்ரார்த்தநா மாத்ரமேயாய் கிஞ்சித்காரம் கொள்ளுமவன் ஸ்ரீமானாக வேணுமென்றும், கிஞ்சித்காரம் பண்ணுமவன் நிரஹங்கார நிர்மமனாக வேணுமென்றும் சொல்லாமையாலும் இங்கு ஸாப்தமாகச் சொல்லுகையாலும் த்ருதீய பதத்துக்கு உத்தர வாக்யம் விவரணமாகக் கடவது. ஆகையால் இப்படி வாக்ய த்வயாத்மகமாய் இருக்கிறது. ஸ்ரிய: பதி உபேயங்களுக்கு அவதியாய் இருக்குமோபாதி இது உபாயங்களுக்கு அவதியாய் இருக்கும். அவன் ஜ்ஞாந சக்த்யாதி ஷட் குணங்களையும் உடையவனாய் இருக்குமோபாதி இதுவும் கார்ப்பண்யாதி ஷடங்கத்தையும் உடைத்தாயிருக்கும். அவன் தேவகீபுத்ரரத்நமாய் இருக்குமோபாதி இதுவும் மந்த்ரரத்நமாயிருக்கும். இம்மந்த்ரந்தான் ஸ்ரீமந்நாதமுநிகள், உய்யக்கொண்டார், மணக்கால்நம்பி, ஆளவந்தார் என்று சொல்லுகிற பரமாசார்யர்களுடைய நெஞ்சாகிற செப்பிலே வைத்துச் சேமிக்கப்பட்டிருக்கும். *அர்த்தோ விஷ்ணு: * என்று சொல்லப்படுகிற அர்த்தவான்களுக்குக் காட்டக் கடவதாய் அறப்பெருவிலையதாய் இருக்கும். ஸர்வோபாய தரித்ரருக்கு ஸர்வஸ்வம்மாய் இருக்கும். இந்த உபாயம் அஜ்ஞருக்கும் அஶக்தருக்கும் வைத்த தண்ணீர்ப்பந்தலாய் இருக்கும். ஆசார்யன் ப்ரமாதா என்றும் அர்ச்சாவதாரம் ப்ரமேயம் என்றும் த்வயம் ப்ரமாணம் என்றும் அருளிச்செய்வர் உய்யக்கொண்டார். இது ஸம்ஸாரவிஷத,ஷ்டனுக்கு ரஸாயநமாய் இருக்கும் என்று அருளிச்செய்வர் மணக்கால் நம்பி. அந்த,னுக்கு மஹாநிதிபோலே இருக்கும் என்று அருளிச்செய்வர் பெரியமுதலியார். க்ஷுதார்த்தனுக்கு அம்ருதபாநம் போலே இருக்கும் என்று அருளிச்செய்வர் திருமாலையாண்டான். ஸ்தநந்தயப்ரஜைக்கு ஸ்தந்யம்போலே இருக்கும் என்று அருளிச்செய்வர் திருக்கோஷ்டியூர் நம்பி. ராஜகுமாரனுக்கு முடியும் மாலையும் போலே

ப்ரபந்நனுக்கு த்வயோச்சாரணம்* என்று அருளிச்செய்வர் பாஷ்யகாரர். *ஸம்ஸாரத்தில் இந்த உபாய விஶேஷம் விலங்கிடப்பட்டவன் தலையிலே முடியை வைத்தாற்போலே* என்று அருளிச்செய்வர் எம்பார். *வாச்யங்களில் எம்பெருமானுக்கு அவ்வருகல்லாதாப்போலே வாசகங்களில் ப்ரபத்தியிற் காட்டில் அவ்வருகில்லை* என்று அருளிச்செய்வர் நஞ்சீயர். *ராஜகுமாரனுக்கு கர்ப்பூரநிகரம் போலே இவனுக்கு ப்ரபத்தியைவிடில் நாக்குவற்றும்* என்று அருளிச்செய்வர் நம்பிள்ளை. *எலுமிச்சம் பழம் கொடுத்து ராஜ்யம் பெறுவாரோபாதி* என்று பணிக்கும் திருக்குருகைப்பிரான்பிள்ளான். *குரு பரம்பரையையொழிந்த ப்ரபத்தியும் ஸாதநாந்தரங்களோடே ஒக்கும்* என்று நிர்வஹிப்பர் முதலியாண்டான். *த்வயம் பிறவி மிடியன் கையில் சிந்தாமணி புகுந்தாற்போலே* என்று நிர்வஹிப்பர் பிள்ளையுறங்காவில்லிதாஸர். இப்படிக்கு ஆசார்யாபிமதமாய்ப்போருகிற ப்ரபதநம் *தென்னன் திருமாலிருஞ்சோலைத் திசை கை கூப்பிச்சேர்ந்த யான்* என்கிறபடியே அல்லாத உபாயங்கள் போலன்றியே இதுவே கைக்கூடின உபாயமிறே. இதில் கோப்த்ருத்வ வரணத்தையும் ஆத்ம நிக்ஷேபத்தையும் சொல்லுகையாலும் த்வயமென்று திருநாமமாய், இருபத்தைந்து திருவக்ஷரமாய், ஆறுபதமாய், ஸமஸ்த பதத்தாலே பத்தர்த்தமாய் இருக்கும். இதில் பூர்வகண்டத்திலும் உத்தர கண்டத்திலும் மாமலர் மங்கையாகிற ஸ்ரீரத்நத்தோடே கூடுகையாலே இருதலை மாணிக்கமாய் இருக்கும். இப்படிக்கொத்த த்வயமும் அர்த்த ப்ராதாந்யத்தால் மூன்றுபடியாய் இருக்கும். விஶேஷண ப்ரதாநம் என்றும் விஶேஷ்ய ப்ரதாநம் என்றும் விஶிஷ்ட ப்ரதாநம் என்றும். ஆஶ்ரயண தசையிலே விஶேஷண ப்ரதாநமாய் இருக்கும். உபாய தசையிலே விஶேஷ்ய ப்ரதாநமாய் இருக்கும். போக தசையிலே விஶிஷ்ட ப்ரதாநமாய் இருக்கும். இதில் ப்ரதம பதத்தில் ஸ்ரீ ஶப்தத்தாலே *ஶ்ரயந்தீ வைஷ்ணவம் பாவம் ஶ்ரீயமாணாऽகிலைர்ஜனை: | ஶ்ருண்ேதி ததபேக்ஷோக்திம் ஶ்ராவயந்தீ ச தா: பரம் || ஶ்ருணாதி நிகிலாந் தோஷாந் ஶ்ருணாதி ச குணைர் ஜகத் || * என்று

சொல்லுகிறபடியே ஸகல ஜநஜநநியான பிராட்டி ஸர்வேஶ்வரனை ஆஶ்ரயணம் பண்ணியிருக்கையும் ஸ்வவ்யதிரிக்த ஸமஸ்த சேதநராலும் தான் ஸமாஶ்ரயிக்கப்பட்டிருக்கையும் இவர்கள் அபேக்ஷாஸூக்திகளைக் கேட்கையும் கேட்ட ஸூக்திகளை ஈஶ்வரனுக்குக் கேட்பிக்கையும் அஜ்ஞாநாதி தோஷங்களைப் போக்குகையும் ஜ்ஞாநகுணத்யவஸாயத்தை உண்டாக்குகையும் ஆக ஷட்ப்ரகார விஶிஷ்டமான புருஷகாரத்தையும் மதுப்பாலே அதினுடைய நித்யயோகத்தையும் ஆக ஶ்ரீமத் பதத்தாலே புருஷகார பூர்த்தியைச் சொல்லுகிறது. அநந்தரம் நாராயணபதத்தாலே வாத்ஸல்யமும் ஸ்வாமித்வமும் ஸௌசீல்யமும் ஸௌலப்யமும் ஜ்ஞாநமும் ஶக்தியும் ப்ராப்தியும் பூர்த்தியும் க்ருபையும் காரணத்வமும்ஆக ஆஶ்ரயண ஸௌகர்யாபாதக ஆஶ்ரித கார்யாபாதக குணங்களை ப்ரதிபாதிக்கிறது. இதில் வாத்ஸல்யம் – தோஷம் போகமாயிருக்கை. ஸ்வாமித்வம் – சொத்தின் பக்கல் உண்டான அபிமானம். ஸௌசீல்யம் – தன்னில் தாழ்ந்தவனோடு தன் மேன்மை தோன்றுதபடி, புரையறச் சேர்ந்திருக்கை. ஸௌலப்யம் – அர்ச்சாவதார பர்யந்தமாக எளியனும்படி ஸந்நிதி பண்ணியிருக்கை. ஆக, இந்த நாலு குணங்களா லும் ஸ்வாபராதங்களாலும் பந்துத்வ ஹாநியாலும் தண்மையாலும் கிட்ட ஒண்ணுமையாலும் உன்டான பயம் நிவ்ருத்தமாகிறது. ஜ்ஞாநம் – ஆஶ்ரித ருடைய நினைவை அறிகை. ஶக்தி – அந்த நினைவைத் தலைக்கட்டிக்கொடுக்கை. பூர்த்தி – ஐஶ்வர்யம் தானிட்ட வழக்காய் இருக்கை. ப்ரர்ப்தி –ஶேஷஶேஷிபாவத்தாலுண்டான உறவு. ஆக இந்த நாலு குணங்களாலும் அஜ்ஞன், அஶக்தன், அபூர்ணன், அப்ராப்தன் என்கிற சங்காகளங்க நிவ்ருத்தியுமாகிறது. க்ருபை – கீழ்ச்சொன்ன நாலு குணங்களும் இவனுடைய கர்மத்தைக் கணக்கிட்டே ப:லம் கொடுக்கைக்குறுப்பாகையால் அது வாராதபடி ஈடுபாடுகண்டு இவனளவில் பண்ணுகிற இரக்கம். காரணத்வம் – அபீஷ்டார்த்தங்களுக்கு நிதாநமாய் இருக்கை. ஆக ஶரணர்த்திக்குறுப்பான ஆஶ்ரயகுணங்களைச்சொல்லுகையாலேபுருஷகாரமும் மிகையென்னும்படி

யான குணபூர்த்தியைச் சொல்லுகிறது. *சரணௌ* என்கிற பதத்தில் தாது விலுண்டான அர்த்தவிஶேஷத்தாலே ப்ராப்ய ப்ராபகங்களிரண்டும் திருவடி களே என்று சொல்லுகிறது. இந்தப் பதம் விக்ரஹத்துக்கு உபலக்ஷணமாய் இருக்கும். *சரணம் ப்ரபத்யே* என்கிற பதங்களாலே ஈஶ்வரன், அறிவும் ஆசையும் உடையார்க்கு அபிமதத்தைக் கொடா நிற்கும். அவனடியும் அறிவும் ஆசையும் உண்டாக்கி அபிமதங்களைக்கொடாநிற்கும். இது சிந்தயந்தி பக்கலிலும் ஸ்ரீமாலாகாரர் பக்கலிலும் காணலாம். ஆகக் கீழ்ச் சொன்ன குணங்களித்தனையும் தொடைக் கொள்ளலாம்படியான விக்ரஹபூர்த்தியைச் சொல்லுகிறது.

உத்தர வாக்யத்தில் ஸ்ரீ ஶப்தத்தால் தாதர்த்யபல கிஞ்சித்கார ப்ரதிஸம்பந்தி பூர்த்தியைச் சொல்லுகிறது. மதுப்பாலே புருஷார்த்தத்தினுடைய ஸர்வ ப்ரகார நித்ய பூர்த்தியைச் சொல்லுகிறது. இந்தப் பதத்திலே கைங்கர்ய ப்ரதி ஸம்பந்தி உண்டாகில் அநந்தர பதத்தாலே சொல்லுகிறது என்னென்னில், கைங்கர்யம் ப்ரீதி ஜந்யமாகையாலும் ப்ரீதி அநுபவஜநிதமாகையாலும் அநுப வம் அநுபாவ்யஸாபேக்ஷமாகையாலும் அநுபாவ்யங்களான ஸ்வரூபரூபகுண விபூத்யாதிகளைச் சொல்லுகிறது. ஆக நாராயண பதத்தாலே ஸ்வரூபரூப குணவிபவாத்யபரிச்சிந்நத்வபூர்த்தியைச் சொல்லுகிறது. சதுர்த்தியாலே கிஞ்சித்காரப்ரார்த்தநாபூர்த்தியைச் சொல்லுகிறது. நமஸ்ஸாலே அதுக் குண்டான விரோதிநிவ்ருத்திபூர்த்தியைச் சொல்லுகிறது. *புருஷகார பூதையான ஸாக்ஷாத் லக்ஷ்மியையும் தத்ஸம்பந்தத்தையும் ஸம்பந்தமடியாக ப்ரகாஶிக்கும் ஸௌலப்யாதி குணங்களையும் ,குணவானுடைய சரணகமலத் தையும் சரணகமலங்களினுடைய உபாயபாவத்தையும், உபாய விஷயமான வ்யவஸாயத்தையும் ,வ்யவஸிதனுடைய கைங்கர்ய ப்ரதிஸம்பந்தியையும் ப்ரதிஸம்பந்தி பூர்ணமாகையையும் பூர்ண விஷயத்தில் பண்ணும் கைங்கர்ய ப்ரார்த்தனையையும், கைங்கர்ய விரோதியான அஹங்காரமமகார நிவ்ருத்தி யையும் ஆக பத்தர்த்தத்தையும் எட்டுப்பதமும் மதுப்பும் சதுர்த்தியுமாகச்

சொல்லுகிறது* என்று நிர்வஹிப்பர் ஆச்சான்பிள்ளை. *ஆஶ்ரயண த்வாரத்தையும் ஆஶ்ரயணீய வஸ்துவையும் ததுபாயபாவத்தையும் தத்வரணத்தையும் ஆஶ்ரயணவஸ்துவினுடைய அதிஶயத்தையும் தத்பூர்த்தியையும் தத்தாஸ்ய ப்ரார்த்தனையையும் தத்விரோதி நிவ்ருத்தியையும் ப்ரதிபாதிக்கிறது* என்று நிர்வஹிப்பர் நஞ்சீயர். *ப்ரதம பதத்தில் விஶேஷண பதத்தாலே ப்ராயச்சித்த வ்யாவ்ருத்தியைச் சொல்லுகிறது. ப்ரதம பதத்தாலே உபாயாந்தர வ்யாவ்ருத்தியைச் சொல்லுகிறது. த்விதீய பதத்தாலே உபேய வ்யாவ்ருத்தியைச் சொல்லுகிறது. க்ரியாபதத்தாலே அதிகாரி வ்யாவ்ருத்தியைச் சொல்லுகிறது. உத்தர வாக்யத்தில் ப்ரதம பதத்தாலே ப்ராப்யாந்தர வ்யாவ்ருத்தியைச் சொல்லுகிறது. த்விதீய பதத்தாலே தேவதாந்தர வ்யாவ்ருத்தியைச் சொல்லுகிறது. இதில் சதுர்த்தியாலே ப்ரயோஜநாந்தர வ்யாவ்ருத்தியைச் சொல்லுகிறது. த்ருதீய பதத்தாலே ஸ்வபாவ வ்யாவ்ருத்தியைச் சொல்லுகிறது* என்று நிர்வஹிப்பர் பெரியபிள்ளை. *ப்ரதம பத விஶேஷணத்தில் ப்ரதம அக்ஷரத்தாலே புருஷகாராத்யபாவவாதிகளை நிரஸிக்கிறது. அநந்தர பதத்தாலே நிர்குணப்ரஹ்மவாதிகளை நிரஸிக்கிறது. ப்ரதம பதாந்தமான த்விவசனத்தாலே நிர்விக்ரஹவாதிகளை நிரஸிக்கிறது. அநந்தர பதத்தாலே உபாயத்வித்வவாதிகளை நிரஸிக்கிறது. க்ரியா பதத்தாலே அத்யவஸாயாபாவவாதிகளை நிரஸிக்கிறது. மதுப்பாலே அநித்யயோகவாதிகளை வ்யாவர்த்திக்கிறது. உத்தர வாக்யத்தில் ப்ரதம பதத்தாலே ஆத்மஸாம்யவாதிகளை நிரஸிக்கிறது. அநந்தர பதத்தாலே ஈஶ்வரஸாம்யவாதிகளை நிரஸிக்கிறது. இதில் சதுர்த்தியாலே கிஞ்சித்கார புருஷார்த்த ப்ரதிபடவாதிகளை நிரஸிக்கிறது. அநந்தர பதத்தாலே ஸ்வப்ரயோஜநவாதிகளை நிரஸிக்கிறது* என்று நிர்வஹிப்பர் நடுவில்திருவீதிப்பிள்ளை.

ஸ்ரீமச்ச₂ப்தத்தாலே ஆநுகூல்ய ஸங்கல்பத்தையும் ப்ராதிகூல்யவர்ஜநத்தையும் ப்ரதிபாதிக்கிறது. நாராயண ஶப்தத்தாலே ரக்ஷிக்கும் என்கிற விஶ்வா

ஸத்தை ப்ரதிபாதிக்கிறது. உத்தர வாக்யத்தில் ஸ்ரீமச்சப்தத்தாலே கோப்த்ருத்வ வரணத்தை ப்ரதிபாதிக்கிறது. நாராயண பதத்தாலே ஆத்மநிக்ஷேபத்தை ப்ரதிபாதிக்கிறது. விரோதி நிவர்த்தக பதத்தாலே கார்ப்பண்யத்தை ப்ரதிபாதிக்கிறது. ஆகையாலே ஷடங்க ஸம்பூர்ணமாய் மந்த்ரரத்நம் என்னும் திருநாமத்தை உடைத்தாயிருக்கும். இதில் ஶரண ஶப்தத்தாலே ஶரணாகதி என்று திருநாமம். க்ரியாபதத்தாலே ப்ரபத்தி என்று திருநாமம். வாக்ய த்வயத்தாலே த்வயம் என்று திருநாமம். சதுர்த்யந்த மான இரண்டுக்கும் நிக்ஷேபம் என்றும் ந்யாஸம் என்றும் திருநாமம். விரோதி நிவர்த்தகபதத்தாலே த்யாகம் என்று திருநாமம். இதில் க்ரியா பதத்தாலே உபாய ப்ரார்த்தனை. சதுர்த்தியாலே உபேய ப்ரார்த்தனை. இவையிரண்டும் அதிகாரி க்ருத்யம். ஏவம்பூதமான த்வயத்தில் நிஷ்டையாவது ஸ்வாசார்ய புரஸ்ஸரமாகக்கோவலர் பொற்கொடியான பிராட்டியிருக்க ஶரணம்புக்குக் கொடிவழியாகச்சென்று ப்ரஹ்மதருவை ஆஶ்ரயித்து இளைப்பாறியிருக்கை. ரகு ராக்ஷஸ ஸம்வாதத் திலும் வ்யாக்ர வாநர ஸம்வாதத்திலும் கபோதோபாக்யாநத்திலும் கண்டுபோக்யாநத்திலும் சரணாகதியினுடைய ஏற்றத்தைக் கண்டு கொள்வது. அநந்தரம் ஏவம்பூதமான ந்யாஸத்துக்கு விவரணமாயிருக்கும் ஸர்வதர்ம பரித்யாக பூர்வகமாக இத்தை விதிக்கிற சரமஶ்லோகம். இது விவரணமானபடி என்னென்னில் அங்கு உபாயாந்தர த்யாகத்தையும் உபாயநைரபேக்ஷ்யத்தையும் சொல்லாமையாலே பூர்வ வாக்யத்துக்கு பூர்வார்த்தம் விவரணமாகிறது. இங்கு ப்ராப்தி ப்ரதிபந்தகங்களடையப் போகக்கடவது. போக்குவான் உபாயபூதனானவன் என்று சொல்லாமையாலே உத்தர வாக்யத்துக்கு உத்தரார்த்தம் விவரணமாகக்கடவது. இப்படிக்கொத்த சரமஶ்லோகம் மூன்று படியாய் இருக்கும் – பரித்யாகம் என்றும், ஸ்வீகாரம் என்றும் மோக நிவ்ருத்தி என்றும். *ஸர்வதர்மாந் பரித்யஜ்ய* என்று த்யாகம் சொல்லுகிறதாய், *மாமேகம் சரணம் வ்ரஜ* என்று ஸ்வீகாரம் சொல்லுகிறதாய் *அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மாசுச :* என்கையாலே மோக

நிவ்ருத்தியைச் சொல்லுகிறது. இதில் ப்ரதம பதத்திலே சோதநா லக்ஷண மான தர்ம ஶப்தத்தாலே, உபஸந்நனான அர்ஜுனனைக் குறித்து மோக்ஷோ பாயமாக அருளிச்செய்த உபாஸநாத்மிகையான பக்தியைச் சொல்லுகிறது. இதில் பஹுவசனத்தாலே கர்மஜ்ஞாநங்களைச் சொல்லுகிறது. இது தன்னாலே யஜ்ஞம், தாநம், தபஸ்ஸு, தீர்த்த கமநம், நித்யம், நைமித்திகம், காம்யம் என்று தொடங்கி உண்டான கர்ம பேதங்களையும், ஸத் வித்யை, தஹரவி த்யை, அந்தராதித்ய வித்யை, அக்ஷி வித்யை என்று தொடங்கி உண்டான ஜ்ஞாந பேதங்களையும், த்யானம், அர்ச்சனம் என்று தொடங்கி உண்டான பக்தி பேதங்களையும், அவதார ரஹஸ்ய ஜ்ஞாநம், புருஷோத்தம வித்யை, திருநாம ஸங்கீர்த்தனம் என்று தொடங்கி உண்டானவற்றையும் சொல்லு கிறது. வக்ஷ்யமாண த்யாகத்தினுடைய கர்மபாவத்தைச் சொல்லுகிறது த்விதீயாவிபக்தியாலே. விஶேஷணமான ஸர்வஶப்தத்தாலே கர்மஜ்ஞாந பக்திகளுக்கும் யோக்யதாபாதகங்களான வர்ணாஶ்ரமாசாரங்களைச் சொல்லு கிறது. அநந்தரம் *பரித்யஜ்ய* என்கிற பதத்தாலே அவற்றினுடைய த்யாக ப்ரகாரத்தைச் சொல்லுகிறது. இங்கு த்யாகம் என்னப் பார்க்கிறது கர்ம ஜ்ஞாந பக்திகளுடைய ஸாதநத்வபுத்தி விடுகை. இந்த ப்ரகாரத்தை *ல்யப்* பாலே சொல்லி *பரி* என்கிற உபஸர்க்கத்தாலே கர்மாதிகளுடைய ஸாதநத்வ புத்தியை ஸவாஸநமாக விடச்சொல்லுகிறது. இப்படி ஸகல தர் மங்களும் த்யாஜ்யமாய் உள்ள இடத்தில் நியததர்மத்யாகம் இல்லை. எங்ஙனே யென்னில் – கர்மராசி மூன்றுபடியாய் இருக்கும். அநர்த்த ஸாதநம் என்றும் அர்த்த ஸாதநம் என்றும் அநர்த்த பரிஹாரகம் என்றும். இதில் அநர்த்த ஸாதநம் என்கிறது ஹிம்ஸாஸ்தேயாதிகமான கர்மராசி. அர்த்த ஸாதநம் என்கிறது கர்மஜ்ஞாநாதிகமான கர்மராசி. சரணார்த்திக்குப் பூர்வம் அநிஷ்டா வஹமாகையாலே த்யாஜ்யம். உத்தரம் உபாயவரணத்துக்கு அங்கமாகையாலே த்யாஜ்யம். அநர்த்தபரிஹாரமான கர்மராசி இரண்டு வகையாயிருக்கும். இதில் ஒரு வகை பூர்வார்ஜிதமான பாபத்தைப் போக்குகைக்கு ப்ராயச்

சித்தமாய் இருக்கும். இதுவும் த்யாஜ்யமாகக்கடவது. மற்றவகை ஆகாமியான அநர்த்தத்தைப் பரிஹரிக்கையாலே இது அநுஷ்டேயமாகக்கடவது. இதிறே நியததர்மமாகையாவது. *க்ரியமாணம் ந கஸ்மைசித் யதர்த்தாய ப்ரகல்பதே | அக்ரியாவதநர்த்தாய கர்ம தத்து ஸமாசரேத் | |* என்கிற படியே நியத தர்மம் கர்த்தவ்யமாகக்கடவது. *அவிப்லவாய தர்மாணும் பாலநாய குலஸ்ய ச | ஸங்க்ரஹாய ச லோகஸ்ய மர்யாதா ஸ்தாபநாய ச | | ப்ரியாய மம விஷ்ணோஶ்ச தேவதேவஸ்ய ஶார்ங்கிண: | மநீஷீ வைதிகாசாராந் மநஸாபிநலங்கயேத் | | * என்கிறபடியே தர்மங்களுக்கு நழுவுதல் வாராமைக்காகவும் குலபாலநார்த்தமாகவும் லோக ஸங்க்ரஹார்த்த மாகவும் மர்யாதா ஸ்தாபநார்த்தமாகவும் அநுஷ்டிப்பான். இது வேண்டா வென்றிருந்தாணுகில் பகவத் ப்ரீணநார்த்தமாக அநுஷ்டிக்க வேண்டும். *ப்ராப்தி ஹேதுத்வபுத்திவிட்டு ப்ரீதி ஹேதுவென்று அநுஷ்டிப்பார்* என்று நம்பிள்ளை அருளிச்செய்வர். அநந்தரம் (மாம்) என்கிற பதத்தாலே ஸாத்யங் களாய், அசேதநங்களாய், அநேகங்களாய், த்யாஜ்யங்களான உபாயங்களைக் காட்டில் ஸித்தமாய், பரம சேதநமாய் ஏகமாய் விஶிஷ்டமான உபாயத்தினு டைய வ்யாவ்ருத்தியைச் சொல்லுகிறது. *பதர்க்கூட்டை விட்டுப் பர்வதத்தை அண்டை கொள்ளுமாப் போலே* என்று நம்பிள்ளை அருளிச்செய்வர். *இந்த ஸித்தோபாயத்தை விட்டு ஸாத்யோபாயங்களில் அந்வயித்தாணுகில் மரக்கலத்தைவிட்டுத்தெப்பத்தைப் பற்றுமோபாதி* என்று நிர்வஹிப்பர் ஸோமாசியாண்டான். அதர்மத்திலே தர்மபுத்தி பண்ணியிருக்கிற அர்ஜுந னுடைய தோஷம் பாராமல் தத்வோபதேஶம் பண்ணுகையாலே வாத்ஸல் யமும், விஶ்வரூபதர்ஶநத்தாலே ஸ்வாமித்வமும், ஒரு மரகதமலையை உரு வகுத்தாப் போலே மேசகமான திவ்யமங்கள விக்ரஹமும் ஸேநாதூளி தூஸரிதமான மைவண்ணநறுங்குஞ்சிக்குழலும் மையலேற்றி மயக்கும் திரு முகத்திலே யரும்பின குருவேர் முறுவலும் கடுக்கினமசிலையும் கையிற்பிடித்த உழவு கோலும் சிறுவாய்க்கயிறுமாய் ஒரு தட்டுத்தாழ நிற்கையாலே ஸௌசீல்

யமும், விஶ்வரூப தர்ஶநத்தாலே பீதனான அர்ஜுநனுக்கு தர்ஶநீயமான வடிவைக் காட்டுகையாலே ஸௌலப்யமும், *வேதாஹம் ஸமதீதாநி* என்கையாலே ஜ்ஞாநமும், *ஆழியால் அன்றங்காழியை மறைக்*கையாலே ஶக்தியும், *நாநவாப்தம் அவாப்தவ்யம்* என்கையாலே பூர்த்தியும் ஸர்வாத்மபாவத்தை அருளிச்செய்கையாலே ப்ராப்தியும் ஆக இந்த குணங்கள் இத்தனையும் விஶ்வாஸார்த்தமாக இந்தப்பதத்திலே அநுஸந்தேயம். அநந்தரம் ஏவங்குண விஶிஷ்டனான ஶரண்யனுடைய நைரபேக்ஷ்யத்தைச் சொல்லுகிறது. அவதாரணரூபமான ஏக ஶப்தத்தாலே ஸாதநஸாத்யங்களினுடைய ப்ருதக்பாவ ஜந்யமான த்வித்வத்தையும் ஸ்வீகர்த்தாவினுடைய அந்வயத்தாலே வருகிற த்வித்வத்தையும் வ்யாவர்த்திக்கையாலே ஶரண்யனுடைய சுனையுடைமையைச் சொல்லுகிறது. அநந்தரம் ஶரண ஶப்தத்தாலே ஸ்வீகாரத்துக்கு உபாயத்வம் கொள்ளில் ஸ்வீகர்த்தா அகலும். ஸ்வீகாரத்வாரா ஸ்வீகர்த்தா அகலில் ததந்வயம் உண்டாம். ஆகையாலே இரண்டையும் வ்யாவர்த்தித்து ஸ்வீகார்யனான எம்பெருமானை உபாயபூதன் என்று சொல்லுகிறது. அநந்தரம் *வ்ரஜ* என்கிற பதத்தாலே இவ்வுபாயத்தினுடைய வரணத்தைச் சொல்லுகிறதாய் இத்தாலே ப்ரபத்தி மாத்ரத்தில் உண்டான ஸௌகர்யம் தோன்றுகிறது. அநந்தரம் *அஹம்* ஶப்தத்தாலே அநிஷ்ட நிவர்த்தகனுடைய ஸர்வஜ்ஞத்வம் ஸர்வஶக்தித்வம் அவாப்தஸமஸ்தகாமத்வம் பரம காருணிகத்வம் என்று தொடங்கி உண்டானவை அநுஸந்தேயம். *த்வா* என்கிற பதத்தாலே *நான் சரண்யன் நீ ஶரணாகதன், நான் ப்ரபத்தவ்யன் நீ ப்ரபத்தா, நான் பூர்ணன் நீ அகிஞ்சநன், ஆகையாலே என் பக்கலிலே பரந்யாஸம் பண்ணியிருக்கிற உன்னை* என்கிறது. அநந்தரம் *ஸர்வ பாபேப்ய:* என்கிற பதத்தாலே புண்யபாபங்களைச் சொல்லுகிறது. புண்யமும் பாபமோ? என்னில் அபிமத விரோதி பாபமாகையாலே மோக்ஷத்தைப் பற்றப் புண்யமும் விரோதியாகையாலே பாபம் என்கிறது. இதில் பஹு வசனத்தாலே அவித்யா கர்மவாஸநாருசி ப்ரக்ருதி ஸம்பந்தங்களையும்

பூர்வாக, உத்தராக,ங்களேயும் சொல்லுகிறது. ஸர்வ ஶப்தத்தாலே க்ருதம் க்ரியமாணம் கரிஷ்யமாணம் அபுத்திபூர்வகம் ஆரப்தம் என்று தொடங்கி உண்டானவற்றைச் சொல்லுகிறது. அநந்தரம் "மோக்ஷயிஷ்யாமி" என்கிற பதத்தாலே த,ாத்வர்த்த,த்தாலே பூர்வாக, உத்தராக,ங்களுடைய அஶ்லேஷ விநாஶத்தைப் புத்ரமித்ரகளத்ரங்களிலே அசல்பிளந்தேறிட்ட புண்ய பாபங் 'களேயும் அதிகாரி விஶேஷஸ்தமான ஆரப்தநிரஸநத்தையும் ஆக இந்த விமோசநத்தைச் சொல்லி இதில் *ணிச்*சாலே உபாயபூதனுடைய ப்ரயோஜக கர்த்ருத்வத்தைச் சொல்லி இத்தாலே ஆதித்ய ஸந்நிதியில் அந்தகாரம் போலே *சும்மெனுதே கைவிட்டோடித் தூறுகள் பாய்ந்தனவே* என்கிற படியே முன்பு யாவை யாவை சில பாபத்துக்கு பீதனுய்ப்போந்தாய் அவை தான் உனக்கஞ்சிப் போம்படி பண்ணுவேன் என்றபடி. அநந்தரம் *மா ஶுச:* என்கிற பதத்தாலே வ்ரஜ என்கிற விதியோபாதி மாஶுச: என்கிற இதுவும் விதியாகையாலே ஸ்வீகாரத்தோபாதி ஶோக நிவ்ருத்தியும் கர்த்தவ்யம் என்கை. ப,லியானவனுக்கு ப,லாப,ாவத்தில் ஶோகம் உத்பந்நமாம். உபாயகர்த்தாவுக்கு உபாயாப,ாவத்தில் ஶோகம் உத்பந்நமாம். இந்த உபாயத்தில் ப,லகர்த்ருத்வங்கள் இரண்டும் உனக்கு இல்லாமையாலும் இவையிரண்டும் நாமே ஆகையாலும் நீ ஶோகிக்க வேண்டா என்கை. உன்னேப் பார்த்தாலும் ஶோகிக்க வேண்டா. என்னேப் பார்த்தாலும் ஶோகிக்கவேண்டா. அதாவது உன்னேப் பார்த்து நிர்ப்பரனுயிரு. என்னேப் பார்த்து நிர்ப்பயனுயிரு என்கை. இனி ஶோகித்தாயாகில் உன் ஸ்வரூபத்தையும் அழித்து என் வைபவத்தையும் அழித்தாயாமத்தனே. முன்பு ஶோகித்திலேயாகில் அதிகார ஸித்தியில்லே. பின்பு ஶோகித்தாயாகில் பல ஸித்தியில்லே. துஷ்கரத்வாபந்நமாய் ஸ்வரூபவிரோதியான ஸாதநபரித்யாகத்தாலே ஶோகிக்க வேண்டா. ஸ்வீகார்ய-உபாயம் ஸுலபமாகையாலே ஶோகிக்க வேண்டா. அது ஸாபேக்ஷமல்லாமையாலே ஶோகிக்க வேண்டா. அவ்யவஹிதோபாயமாகையாலே ஶோகிக்கவேண்டா. மாநஸமாத்ரமாகையாலே ஶோகிக்க வேண்டா.

உபாயம் அபாயரஹிதமாக பலவிதரணநிபுணமாகையாலே ஶோகிக்க வேண்டா. விரோதி போமோ போகாதோ என்று ஶோகிக்க வேண்டா. *வ்ரஜ* என்கிற பதம் ஸ்வீகாரநிபந்தநமாயிருக்குமோபாதி இந்தப்பதமே நிர்பரத்வநிபந்தநமாயிருக்கும். கமுகுண்ணில் வாழையுமுண்ணும் என்றிருக்கை. ஆகபலப்ராப்தி அவிளம்பேந கைபுகுருகையாலே ஒரு ப்ரகாரத்தாலும் உனக்கு ஶோக ஹேதுவில்லை என்று தலைக்கட்டுகிறது. ஆக த்யாஜ்யத்தையும் த்யாஜ்யபஹுளத்வத்தையும் த்யாஜ்ய ஸாகல்யத்தையும் த்யாகவிஶிஷ்டவரணத்தையும் தந்நைரபேக்ஷ்யத்தையும் ததுபாயபாவத்தையும் தத்வரணத்தையும் ததநிஷ்டநிவர்த்தககுணயோகத்தையும் தந்ந்யஸ்த ப,ரத்வத்தையும் தத்பாபத்தையும் தத்பாஹுள்யத்தையும் தத்ஸர்வவிதத்வத்தையும் தந்மோசந ப்ரகாரத்தையும் தந்மோசநஸங்கல்பத்தையும் தந்ந்யஸ்தப,ர ஶோகநிவ்ருத்தியையும் ப்ரதிபாதிக்கிறது.

பாஷ்யகாரர் ஆழ்வானுக்கு சரம ஶ்லோகத்தை உபதேஶித்து *இருந்தபடியென்?* என்று கேட்டருள *ஒரு ஜன்மத்திலிருந்தும் ஒரு ஜன்மத்திலே போந்தாப்போலே இருந்தது* என்று பணித்தார். நஞ்சீயர் சரம ஶ்லோகார்த்தத்தைக் கேட்டுத்தலைச்சுமை போட்டாப்போலே இருந்ததென்றார். *ஸ்வரூப ப்ரகாஶக வாக்யம் திருமந்த்ரம். அநுஷ்டான ப்ரகாஶக வாக்யம் த்வயம். விதாநப்ரகாஶக வாக்யம் சரமஶ்லோகம். ஶாஸ்த்ராபிமதம் திருமந்த்ரம். ஆசார்யாபிமதம் த்வயம். ஶரண்யாபிமதம் சரமஶ்லோகம்* என்று ஆச்சான் பிள்ளை நிர்வஹிப்பர். *ப்ரமாண ஹ்ருதயம் திருமந்த்ரம். ப்ரமாத்ரு ஹ்ருதயம் த்வயம். ப்ரமேயஹ்ருதயம் சரமஶ்லோகம்* என்று ஜீயர் நிர்வஹிப்பர். திருமந்த்ரம் திருமுகப்பாசுரமாயிருக்கும். த்வயம் படியெடுப்பாயிருக்கும். சரமஶ்லோகம் வெட்டாயிருக்கும். இந்த சரமஶ்லோகத்துக்கு ஸங்க்ரஹம் த்வயம். த்வயத்துக்கு ஸங்க்ரஹம் திருமந்த்ரம். திருமந்த்ரத்தில் ப்ரதம பதத்தில் ப்ரதமாக்ஷரமான அகாரம் ப்ரக்ருதி என்றும் ப்ரத்யயம் என்றும் இரண்டாய் இதில் ப்ரக்ருதியான அகாரம் உபாயத்தைச் சொல்லு

கிறது. ப்ரத்யயமான சதுர்த்தி உபேயத்தைச் சொல்லுகிறது. அகா்ர விவரணம் உகாரம். உகாரவிவரணம் மத்யம பதம். மகார் விவரணம் த்ருதீய பதம். மத்யமபத விவரணம் த்வயத்தில் பூர்வகண்டம். த்ருதீய பத விவரணம் உத்தர கண்டம். பூர்வ கண்ட விவரணம் சரமஶ்லோகத்தில் பூர்வார்த்தம். உத்தர கண்ட விவரணம் உத்தரார்த்தம். ப்ரதம பதத்தில் மத்யமாக்ஷரமும் மத்யம பதமும் த்வயத்தில் பூர்வ கண்டமும் ஶ்லோகத்தில் பூர்வார்த்தமும் உபாய வாசகமாயிருக்கும். ப்ரதம பதத்தில் த்ருதீயாக்ஷரமும் த்ருதீய பதமும் த்வயத்தில் உத்தர கண்டமும் சரம ஶ்லோகத்தில் உத்தரார்த்தமும் உபேய வாசகமாயிருக்கும். சரமஶ்லோகத்தில் உத்தரார்த்த ஸங்க்ரஹம் த்வயத்தில் உத்தர கண்டம். உத்தரகண்ட ஸங்க்ரஹம் திருமந்த்ரத்தில் த்ருதீய பதம். த்ருதீய பத ஸங்க்ரஹம் மகாரம். ஶ்லோகத்தில் பூர்வார்த்த ஸங்க்ரஹம் த்வயத்தில் பூர்வ கண்டம். பூர்வ கண்ட ஸங்க்ரஹம் மத்யம பதம். மத்யம பத ஸங்க்ரஹம் உகாரம். மகார ஸங்க்ரஹம் சதுர்த்தி. உகார ஸங்க்ரஹம் அகாரம். ஆக, சரம ஶ்லோக ஸங்க்ரஹம் த்வயமாய், த்வய ஸங்க்ரஹம் திருமந்த்ரமாய், திருமந்த்ர ஸங்க்ரஹம் ப்ரணவமாய், ப்ரணவ ஸங்க்ரஹம் ப்ரதமாக்ஷரமான அகாரமாய் இருக்கும். இந்த அகாரம் "அ இதி ப்ரஹ்ம", "அகாரோ விஷ்ணுவாசக:" என்கிறபடியே பகவத் வாசகமாய் இருக்கும். பகவத் வாசகமாய் இருக்கிற அகாரம் உபாயோபேயங்களைச் சொல்லுகையாலே வாச்யபூதனுடைய ஸ்வரூபமும் உபாயோபேயத்வமாம். உபாயோபேயத்வம் ஸ்வரூபமானபடி என்னென்னில், ப்ரஹ்ம ஸ்வரூபம் ஜ்ஞாநாநந்தம் என்று ஸுப்ரஸித்தமாகையாலே ஜ்ஞாநம் உபாயம், ஆநந்தம் உபேயம். இவ்வுபாயோபேயங்கள் எம்பெருமானுக்குத் தத்வம் என்று தத்வரூபமான திருமந்த்ரத்தாலும் ஹிதரூபமான த்வயத்தாலும் விதாநரூபமான சரமஶ்லோகத்தாலும் அறிகை இவ்வதிகாரிக்கு தத்வதர்ஶித்வமானது. இந்த தத்வ தர்ஶநத்தாலே யிறே இவனுக்கு ஸ்வரூப ஸித்தி பிறப்பது. ஆனால், ஜனகாதிகள் கர்மநிஷ்டராயும் பரதாதிகள் ஜ்ஞாந நிஷ்டராயும் ப்ரஹ்லாதமுகரானார் பக்தி

நிஷ்டராயும் மோக்ஷம் பெறுகையாலே இவை உபாயமாகக் குறையென்? என்னில் பாண்டுரோகியானவன் மாணிக்கத்தைக் கொடுத்து மண்ணுங் கட்டியைக் கொள்ளுகைபோலே அத்ருஷ்டரூபமான கர்மமும் சேதநாபிப்ரா யத்தாலே த்ருஷ்டத்தில் நோக்குகிறதாயிருக்கும். செத்துக் கிடந்த புலியை ம்ருதஸஞ்ஜீவிநியையிட்டு எழுப்பினுல் அதுதானே பாதகமாயிருக்குமா போலே ப்ரக்ருதிவஸ்யன் ப்ரக்ருத்யாத்ம விவேகத்தைப் பண்ணுநிற்கச் செய்தேயும் "ஸ்வதந்த்ரோஹம்" என்றிருக்கையாலே பாதகமாய் இருக்கும். முக்தி ஹேதுவாகா நிற்கச்செய்தேயும் ஏவம்விதமான ஜ்ஞாநமும் அநர்த்த ஹேதுவாய் இருக்கும். பிச்சானேயை மேற்கொண்டு வீரபதம் பெறுவாரைப் போலே இருக்கும் பக்தியோகம். இப்படி தோஷபூயிஷ்டங்களாகையாலும் சிரதரஜந்மஸாத்யங்களாகையாலும் அதுக்குமேலே எம்பெருமானுடைய சரணமுடைமையை அழிக்கையாலும் இவையும் உபாயமன்று. இனி உபாய மேதென்று பார்த்தால் ப்ரபத்தியே உபாயமாக வேணும். பக்திப்ரபத்திகள் இரண்டும் தம்மில் ஒவ்வாதோ? என்னில் பக்திக்கு க்ருஷ்யாதி த்ருஷ்டாந்தம். ப்ரபத்திக்கு ரத்நவாணிஜ்யம் த்ருஷ்டாந்தம். க்ருஷ்யாதி அர்த்தஸாதநமாம் போது அநேக யத்நங்களே உடைத்தாய் ஒன்று விகலமானுலும் பலவைகல்யம் பிறக்கும். ரத்நவாணிஜ்யம் அல்பயத்நமும் அநேகார்த்தங்களுக்கு ஸாதநமாய் இருக்கும். ஆகையால் அஸக்ருத் கார்யையான பக்தியிற்காட்டில் ஸக்ருத்கார் யையான ப்ரபத்திக்கு உத்கர்ஷம் உண்டு. அதுக்குமேலே பக்தியிற் காட்டில் ப்ரபத்திக்கு ப்ராரப்தபங்கரூபமான பலாதிக்யமுண்டு. ஆகையாலே ப்ரபத்தி உத்க்ருஷ்டமாகக்கடவது. ப்ரபத்திதான் உபாயமாமளவில் ஶப்தோச்சாரண மாத்ரமும் உபாயமன்று. இது உபாயமாகில் ஸாதநாந்தர விஶேஷமாய் இருக் கும். இனி உபாயமேதென்று நிஷ்கர்ஷித்தால் ப்ரபத்தவ்யனே உபாயமாகக் கடவது. உபாயோபேயங்கள் ஸ்வரூபமாகையாலே உபேயபூதனுனவனே உபாயமாமளவில் இவ்வதிகாரிக்குச் செய்ய வேண்டிய க்ருத்யம் ஒன்றும் இல்லே. இவன் ஆர்த்த ப்ரபந்நனுகில் அப்போதே ப்ராப்யஸித்தி பிறக்கும்.

த்ருப்தப்ரபந்நனுகில் ஶரீராவஸாநஸமநந்தரம் ப்ராப்யஸித்தி பிறக்கும். ஆக இப்படி உபாயோபேயங்கள் ஈஶ்வரனுக்குத் தத்வமென்று *உபாயோபே யத்வே ததிஹ தவ தத்வம் நது குணௌ* என்று ப்ரதிஜ்ஞை பண்ணி ரஹஸ்யத்ரய பர்யந்தமாக இத்தை உபபாதித்து கர்மஜ்ஞாந ஸஹக்ருதையான பக்தியிற் காட்டில் ப்ரபத்தி வ்யாவ்ருத்தி சொல்லுகிற முகத்தாலே உபாயோ பேயத்வங்கள் தத்வம் என்று நிகமிக்கிறது.

இப்படிக்கொத்த தத்வம் அறியும் போது *உபதேக்ஷ்யந்தி தே ஜ்ஞாநம் ஜ்ஞாநி ந: தத்வதர்ஶிந:* என்கிறபடியே தத்வதர்ஶியான ஆசார்யனை ஆஶ்ரயித்துத் தந்முகத்தாலே உபதேஶிக்க அறியவேணுமென்று ஜீயர் பன்னிரண்டு ஸம்வத்ஸரம் ஆஶ்ரயித்தபின்பிறே பட்டரும் தத்வோபதேஶம் பண்ணினர். வேதாந்தா சார்யரான உடையவர் பதினெட்டு பர்யாயம் சென்று ஆஶ்ரயித்த பின்பிறே திருக்கோஷ்டியூர் நம்பி இந்தத் தத்வோபதேஶம் பண்ணினர். ஸர்வஜ்ஞரான உய்யக்கொண்டார் ஸர்வவித அநுவர்த்தநம் பண்ணின பின்பிறே ஸ்ரீமந்நாத முநிகள் தத்வோபதேஶம் பண்ணினர். ஆசார்யனும் இந்த அர்த்தத்தைக் கசடர்க்கு உபதேஶிப்பானல்லன். காம பரவசர்க்கு உபதேஶி ப்பானல்லன். கில்பிஷஜீவிகளுக்கு உபதேஶிப்பானல்லன். அபிமான க்ரஸ்த ருக்கு உபதேஶிப்பானல்லன். கீர்த்தியைப்பற்றி உபதேஶிப்பானல்லன். குத்ஸித ஜனங்களுக்கு உபதேஶிப்பானல்லன். க்ருதக்,னருக்கு உபதேஶிப்பா னல்லன். கேவலாத்மபரர்க்கு உபதேஶிப்பானல்லன். கைதவ வாதிகளுக்கு உபதேஶிப்பானல்லன். கோபிகளுக்கு உபதேஶிப்பானல்லன். கௌதஸ்கு தர்க்கு உபதேஶிப்பானல்லன். அமர்யாதர்க்கு உபதேஶிப்பா னல்லன். அஸூ யாபரர்க்கு உபதேஶிப்பானல்லன். வஞ்சநபரர்க்கு உபதே ஶிப்பானல்ன். சஞ்சலமதிகளுக்கு உபதேஶிப்பானல்லன். டாம்பீகர்க்கு உபதேஶிப்பானல் லன். ஸத்காரத்துக்கு உபதேஶிப்பானல்லன். ஸாதநாந்தரநிஷ்டர்க்கு உபதே ஶிப்பானல்லன். கார்ப்பண்ய நிஷ்டரான அதிகாரியினுடைய ஆர்த்தியைக் கண்டு இரங்கி உபதேஶிக்கிறவன் ஆசார்யனாகிறான். சிஷ்யனாகில் தான்

ஸத்யப்ரக்ருதியாய் ஸதாசார்யபரிஸரத்திலே ஸர்வகாலமும் வர்த்திக்கக்கடவனும் ஸந்ததம் தத்வ குதூஹலியாய் ஸம்ஸாரத்தில் உண்டான ஸுகாநுபவத்தை ஸப்தார்ச்சிஸ்ஸினுடைய ஜ்வாலையை விழுங்கி ஸந்தாபத்தைப் போக்குமோபாதியும் விஷவ்ருக்ஷபலாஸ்வாதனத்தோபாதியும் நிர்வேதம் பண்ணி இருக்கக் கடவனும் "ஸஹிவித்யாதஸ்தம் ஜநயதி" என்கிறபடியே ஆசார்யனுகிற பிதா வுக்குத் திருமந்த்ரமாகிற மாதாவின் பக்கலிலே அபிஜாதனும், ஆஸ்திக்யாதி குணவிஶிஷ்டனும், ஆசார்யனுடைய சாயையை அநுவர்த்திக்கக்கடவனும், ஆத்ம யாத்ரையும் தேஹயாத்ரையும் ஆசார்யன் இட்ட வழக்காம்படி அவன் பக்கலிலே பரந்யாஸம் பண்ணியிருக்குமவன் சிஷ்யன். "தேவுமற்றறியேன்" என்று ஸ்ரீமதுரக்வியாழ்வாரும் ஆசார்ய பரந்யாஸம் பண்ணினுர். "விட்டு சித்தர் தங்கள் தேவர்" என்று நாச்சியாரும் பரந்யாஸம் பண்ணினுர். இவ் வர்த்தத்தை இன்னுர் சொல்லி இன்னுர் கேட்க வேண்டும் என்கிற நியதி இல்லை. பிதா புத்ர ஸம்வாதத்திலே பிதாவுக்குப் புத்ரன் உபதேஶம் பண்ணி னுன். அகஸ்த்யருக்கு லோபாமுத்ரை உபதேஶம் பண்ணினுள். கௌரிக்கு ருத்ரன் உபதேஶித்தான். ஆசார்ய புத்ரரான சுக்ரனுக்கு ஜனகன் உபதே ஶித்தான். பரமர்ஷிகளுக்கு தர்மவ்யாதன் உபதேஶித்தான். ஆண்டாள் பட்டர் பக்கலிலே ஶ்ரவணம் பண்ணியிருந்தாள். "பரதாய அப்ரமேயாய குஹோ கஹந கோசர:" என்கிறபடியே குஹப்பெருமாள் ஸ்ரீபரதாழ்வானுக்கு ராம வ்ருத்தாந்தத்தைச் சொன்னுர். "விருப்புற்றுக் கேட்கின்றேன் சொல்லாழி வெண் சங்கே" என்று நாச்சியார் ஸ்ரீ பாஞ்சஜன்யத்தைக் கேட்டாள். ஆகை யாலே பகவத் வைபவம் சொல்லுமவன் ஆசார்யன். கேட்குமவன் சிஷ்யன். இவ்வதிகாரி ஆசார்யன் பக்கலிலே கேட்கும்போது ஜனகன் வாசலிலே சுக்ரன் பட்டது பட்டாகிலும் கேட்கவேண்டும். ஊஷர க்ஷேத்ரத்திலே நல்லவிரை இட்டாலும் ப்ரயோஜநமில்லை. ஸுக்ஷேத்ரத்திலே பொட்டை விரையிட்டாலும் ப்ரயோஜனமில்லை. நல்ல தரையிலே நல்ல விரையையிட்டாலிறே கார்யகர

மாவது. ஆகையாலே அவன் ஸத்வப்ரக்ருதியுமாய் நல்ல கேள்வியில் ஶ்ருதமாக வேண்டும். இப்படிக்கொத்த தத்வத்தை உபதேஶித்த ஆசார்யனுக்கு சிஷ்யன் செய்யும் உபகாரம் என் என்று பார்த்தால் "சரீரம் அர்த்தம் ப்ராணம்ச ஸத்குருப்யோ நிவேதயேத்" என்கிறபடியே ஆசார்ய ஸமர்ப்பணம் பண்ணுகிற சரீரமும் அர்த்தமும் ப்ராணமும் இதுக்கு ஸத்ருசமல்லாமையாலே அதுக்கீடாக இவன் செய்யலாவது ஒன்றுமில்லை. இனி ஆசார்யன் பக்கலிலே உபகாரஸ்ம்ருதி பண்ணியிருக்கையிறே நம்மாழ்வார் நஞ்சீயர் நம்பிள்ளை என்று போருகிறது. ஆசார்யர்களுக்கு எல்லை நிலம் கூரத்தாழ்வான். ஆசார்ய விஶ்வாஸத்துக்கு எல்லை நிலம் சபரியும் பொன்னாச்சியாரும். ஆசார்ய குணங்களுக்கு எல்லை நிலம் இரக்கம். சிஷ்யகுணங்களுக்கு எல்லை நிலம் உபகாரஸ்ம்ருதி. ஆசார்யன் உபதேஶிக்கும் திருமந்த்ரத்துக்கு எல்லை நிலம் மந்த்ர ரத்நம். மந்த்ர ரத்நத்தில் சொல்லுகிற ஆஶ்ரய குணங்களுக்கு எல்லைநிலம் ஸௌலப்யம். இந்த குணவிஶிஷ்டனுடைய விக்ரஹங்களுக்கு எல்லை நிலம் அர்ச்சாவதாரம். இவனைப் பெறுகைக்கு உண்டான உபாயங்களுக்கு எல்லை நிலம் இவன்தான். இவ்வுபாய வ்யவஸாயத்துக்கு எல்லை நிலம் த்ரௌபதியும் திருக்கண்ணமங்கையாண்டானும். உபாயபூதனான அவன் தானே உபேயத்துக்கு எல்லை நிலம். இவ்வுபேய வ்யவஸாயத்துக்கு எல்லை நிலம் சிந்தயந்தியும் பெரிய உடையாரும். இம்மந்த்ரத்துக்கு எல்லை நிலமான அதிகாரி ப்ரபந்நன். ப்ரபந்நனுடைய காலக்ஷேபத்துக்கு எல்லை நிலம் பகவத் கைங்கர்யம். பகவத் கைங்கர்யத்துக்கு எல்லைநிலம் அனந்தாழ்வான். பாகவத கைங்கர்யத்துக்கு எல்லைநிலம் எண்ணாயிரத்தெச்சான். ப்ரபந்நனுடைய காலக்ஷேபம் கைங்கர்யாந்விதம். ஜ்ஞாநம் பிறக்கை ஸ்வரூபம். ஆசார்யனுக்கு மிதுநக்ருத்யஜ்ஞாபநம் ஸ்வரூபம். இத்தை அறிந்த அதிகாரிக்கு வ்யவஸாயம் ஸ்வரூபம்.

ஆக இந்த பூர்ணாதிகாரியானவன் இப்படி தத்வோபதேஶம் பண்ணின ஆசார்யன் பக்கலிலே பரஸ்வரூபத்தையும் ஸ்வஸ்வரூபத்தையும் உபாய

ஸ்வரூபத்தையும் விரோதி ஸ்வரூபத்தையும் ப₃ல ஸ்வரூபத்தையும் அறிந்து. அவன் பக்கலிலே க்ருதஜ்ஞனுமாய் ஶ்ரிய : பதியான எம்பெருமானையே ஶேஷியாகவும் தன்னை ஶேஷபூதனாகவும், அவனை ஸ்வாமியாகவும் தன்னை தாஸபூதனாகவும், அவனை ஆத்மாவாகவும் தன்னை ஶரீரபூதனாகவும், அவனைப் புருஷனாகவும் தன்னை ஸ்த்ரீத்வகுணயுக்தனாகவும் அநுஸந்தித்து, "நம்முடைய த்₃ருஷ்டத்தைக் கர்மாதீநமாகவும் நிர்வஹிக்கும், அத்ருஷ்டத்தை க்ருபாதீநமாக வும் நிர்வஹிக்கும்" என்று அவன் பக்கலிலே பரந்யாஸம் பண்ணி இருக்கு மவனுக்கு ஸ்வரூபஸித்தி பிறக்கும்.

தத்வ பூஷணம் முற்றிற்று

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்